بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

# கியாமத் நாளின் அடையாளங்கள்

K.M. முகம்மது மைதீன் உலவி



வெளியீடு
மாலிக் பப்ளிகேஷன்
நல்லூர்-625022

பொருளடக்கம்

# நூலின் உள்ளே . . .

# முன்னுரை

புகழ் அனைத்தும் இறைவனுக்கே!

- மறுமைநாள்
- கியாமத் நாள்
- நியாயத் தீர்ப்பு நாள்

இப்படி முஸ்லிம்களிடம் அறியப்பட்டுள்ள - உலகம் அழிந்து மறு உலகம் என்று அறியப்பட்டுள்ள - நாள் பற்றியும், அதற்கு முன் ஏற்படும் அடையாளம் பற்றியுமே இங்கே தொகுத்து வழங்கி உள்ளேன்.

1400 ஆண்டுகளுக்கும் முன்பே இவை நடக்கும் என்று சிலவற்றைச் சொன்னார்கள் நபி (ஸல்) அவர்கள். அவர்கள் கூறிச்சென்ற அடையாளங் களில் பல நடந்து முடிந்து விட்டன. அவர்களின் முன்னறிவிப்பு நடந்த திலிருந்து அவர்கள் ஓர் 'இறைத் தூதர் தான்' என்பது நிரூபணமாகி உள்ளது.

நடந்தது போக இனியும் நடக்கும் என அவர்கள் கூறியுள்ள சில அடையாளங்கள் நிச்சயம் நடந்தே தீரும். இதில் சந்தேகமே இல்லை. அவை நிகழ்ந்து முடிந்ததும் மறுமை நாள் வந்து விடும்.

மறுமை நாளில் நல்லவன், தீயவன் யார்? யார்? என இறைவன் வினக்கி, சொர்க்கம், நரகம் யாருக்கு எனத் தீர்ப்பு வழங்குவான். அதுவே நிரந்தர வாழ்வும் கூட..

மறுமை வராது என்று நம்புவோர் ஒரு புறம். வருவதை நம்பினாலும் இப்போது வராது என்று நம்புவோர் ஒரு புறம் என, மறுமை பற்றிய சந்தேகப் பேர் வழிகளுக்கு 'மறுமை வரும் அதற்கும் முன் சில அடையாளம் நிகழும் என்பதையே இந்த நூலில் விவரிக்கப்படுகிறது.

இந்த அடையாளம் ஏற்படும் காலங்களில் நாம் வாழ நேரிடலாம். இயலாமலும் போகலாம். இந்த அடையாள நிகழ்வின் போது (ஈமானிய) இறை விசுவாசத்தில் குழப்பம் ஏற்படும் என்பதை அறிவதால், அக்காலத் தை அடையும் முஸ்லிம்கள் முழுமையான ஈமானுடன் மரணிக்க நாம் பிரார்த்திக்க வேண்டும்.

எல்லாவற்றையும் விட மறுமைக்கான அறுவடை நிலமாக இவ்வுலக வாழ்க்கை நமக்கு அமைந்திட வேண்டும். இதற்கு அல்லாஹ் அருள் புரிவானாக!

அன்புடன்
K.M. முகம்மது மைதீன் உலவி

நல்லூர்
மதுரை - 22

# கியாமத் நாளின் அடையாளங்கள்

அல்லாஹ், வானவர், வேதம், நபிமார்கள், மறுமை நாள், விதி ஆகிய ஆறின் மீதும் முழுமையான நம்பிக்கை கொள்வது ஒவ்வொரு முஸ்லிமின் மீதுள்ள கடமையாகும். இதில் ஒன்றை நம்பி, ஒன்றை ஏற்க மறுத்தாலும் ஒருவன் இறை நம்பிக்கையாளனாக ஆக முடியாது.

இந்த ஆறின் மீதும் முழுமையான நம்பிக்கை உள்ள ஒருவனே இறை நம்பிக்கையாளன் என்ற பெயர் பெறலாம். இஸ்லாம் எனும் வட்டத்திற்குள் இருக்கலாம். இதில் எந்த ஒன்றை மறுத்தாலும் அவன் 'இறை நம்பிக்கையாளன் இல்லை' என இஸ்லாம் அறிவிக்கிறது.

மக்காவில் வாழ்ந்த இணைவைப்போர், அல்லாஹ்வை நம்பி இருந்தனர். இறை மறுப்பாளர்கள், நரகத்திற்குரியவர்கள் என அறிவிக்கப்பட்ட அபூஜஹல், அபூலஹப், உத்பா, ஷைபா போன்றோர் 'அல்லாஹ்' வையும் கடவுள் என நம்பினர் என்பதை திருக்குர்ஆன் மூலமே நாம் அறியமுடிகிறது.

**அவர்களைப் படைத்தது யார்? என அவர்களிடம் நீர் கேட்டால், 'அல்லாஹ்' என்று தான் கூறுவார்கள்...**

**(அல்குர்ஆன் 43:87)**

**வானங்களையும், பூமியையும் படைத்தது யார்? என அவர்களிடம் நீர் கேட்டால், 'அல்லாஹ்' என்று தான் பதில் கூறுவார்கள்...** **(அல்குர்ஆன் 31:25, 39:38)**

**வானங்களையும், பூமியையும் படைத்து; சந்திரனையும், சூரியனையும் தன் கட்டுப்பாட்டில் வைத்திருப்பவன் யார்? என்று அவர்களிடம் நீர் கேட்டால், 'அல்லாஹ்தான்' என, பதில்**

கூறுவார்கள் (அல்குர்ஆன் 29:61)

**வானிலிருந்து மழையைப் பொழியச் செய்து, காய்ந்த பூமியை உயிர்பித்(து விளையச் செய்)தவன் யார்? என்று அவர்களிடம் நீர் கேட்டால், 'அல்லாஹ் தான்' என்று பதில் கூறுவார்கள்.**

**(அல்குர்ஆன் 29:63)**

அல்லாஹ்வை நம்பியிருந்தனர் மக்காவாசிகள். ஆனாலும் அவர்களில் பலர் 'இறை மறுப்பாளர்கள்' என அறிவிக்கப்பட்டனர். காரணம், அவர்கள் கொண்ட நம்பிக்கையில் உள்ள குறைபாடு தான். அல்லாஹ்வை நம்பினார்களே தவிர, அல்லாஹ்வுக்கு எதையும் இணைவைக்கக் கூடாது என்ற உண்மையை மறந்து விட்டனர். விளைவு! 'இறை மறுப்பாளர்கள்' 'நரகத்திற்குரியவர்கள்' என்று அறிவிக்கப்பட்டனர். எனவே ஈமான் எனும் நம்பிக்கை முழுமை பெற்றதாக அமைய வேண்டும்.

நம்பிக்கை கொள்ளப்பட வேண்டிய 'மறுமை நாள்' பற்றிய எச்சரிக்கை திருமறைக் குர்ஆன் நெடுகிலும் உள்ளது. இறைமறுப்பாளர்கள், இணை வைப்போர் இதை நம்பிக்கை கொள்வதில் குறை வைத்துவிட்டனர் என்பது பெரிய ஆச்சரியம் அல்ல. ஆனால் முஸ்லிம்களும் கூட இதில் முழு நம்பிக்கை இல்லாதவர்களாக உள்ளனர் என்று கருதும் அளவுக்கே வாழ்கின்றனர்.

மறுமை நாள் மீதான நம்பிக்கை அவசியமானது. கட்டாய மானது எனஒரு சிலர் விளங்கி இருந்தாலும், அதற்காக தங்களை தயார் படுத்திக் கொள்வதும் இல்லை. 'எப்போதோ வரும் ஒரு நிகழ்வுக்காக, இப்போதே நாம் ஏன் அலட்டிக் கொள்ள வேண்டும்?' என்ற எண்ணம் மேலோங்கியதே இதற்குக் காரணமாகும்.

ஒரு சிலர் இஸ்லாமியச் சட்டங்களை பின்பற்றுவதில்

அல்லது அதை நம்புவதில் முழு ஈடுபாட்டைக் காட்டினாலும், மறுமை நம்பிக்கை மீது மட்டும் ஏனோ தானோ வென்றே உள்ளனர். இதனால் தங்களின் ஈமானை இழந்து கொண்டிருக்கிறோம் என்பதை அவர்கள் உணர்வதில்லை.

அல்லாஹ்வை நம்புங்கள் என்று வலியுறுத்திய நபி (ஸல்) அவர்கள் அதே அளவிற்கு 'மறுமையை நம்புங்கள்' என்றும் வலியுறுத்தினார்கள். 'இவ்வுலகத்துடன் நாம் வாழ்வு முடிந்திடவில்லை. மரணத்திற்குப் பின் இன்னு மொரு வாழ்வு உண்டு' என்ற உண்மையை நபி (ஸல்) அவர்கள் போதித்துக் கொண்டே இருந்தார்கள்.

## இறந்தப்பின் வாழ்வா?

இந்த கேள்வி எவருக்கும் எழத்தான் செய்யும். இறந்து மண்ணோடு மண்ணாய்ப் போய் விடுகிறோம். சிலரோ இறந்தபின் எரியூட்டப்பட்டு சாம்பலாய் போய் விடுகின்றனர். ஆதி மனிதர் முதல், உலகம் அழியும் போது உள்ள மனிதர்கள் வரை மீண்டும் எழுப்புவது என்பது இயலாத காரியம் என்று தங்களுக்குத் தாங்களே விவாதம் செய்து கொள்கின்றனர்.

இன்னும் சிலர் இக்கேள்விக்கு பதில்காண இயலாமல், 'உலகிற்கு அழிவில்லை' என்று முடிவு செய்து விடுகின்றனர். ஒரு சில கடவுள் நம்பிக்கையாளர்கள், 'தங்களின் செயல்களில் நன்மைக்கான பயனையோ, தீயவைக்களுக்கான தண்டனையையோ நாம் அடையத் தான் வேண்டும். ஆனால் இதற்காக 'மறு உலகம்' என்று காத்திருக்க வேண்டியதில்லை. நாம் இறந்த பிறகும் பிறப்பு தொடரும். நல்லவனாக இருப்பின் நல்ல பிறவியாகவும், கெட்டவனாக இருப்பின் கெட்டப் பிறவியாகவும் பிறப்போம். இதுதான் தீர்வு' என்று கூறி 'மறுபிறவி'

கியாமத் நாளின் அடையாளங்கள்
தத்துவத்தை போதிக்கின்றனர்.

இதே மாதிரியான சந்தேகமும், கேள்வியும் நபி (ஸல்) அவர்களின் காலத்து மக்களுக்கும் இருந்தது என்பதை பின்வரும் வசனம் கூறுகிறது.

**அவன்தான் வானங்களையும், பூமியையும், ஆறு நாட்களில் படைத்தான். அவனது அர்ஷ், தண்ணீர் மீதுள்ளது. உங்களில் எவர் நற்செயல் செய்வதில் சிறந்தவர்? என்பதை உங்களில் சோதிப்பதற்காக (இவ்வாறு படைத்தான்). மேலும் 'மரணத்திற்குப் பின் நீங்கள் எழுப்பப்படுவீர்கள்' என நீர் கூறினால், 'இது தெளிவான சூன்யமே தவிர வேறில்லை' என இறைமறுப்பாளர்கள் கூறுகின்றனர்.**

**(அல்குர்ஆன் 11:7)**

**மேலும், அவர்கள் 'நாம் இறந்து விட்டோம். மண்ணாகவும் எலும்புகளாகவும் ஆகிவிட்டோம். இதன் பின்னரும் எழுப்பப் படுவோமா? நம்முன்னோர்களும் எழுப்பப் படுவார்களா? என்று கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். (அல்குர்ஆன் 56:47,48)**

## இறந்தபின்பும் வாழ்வுண்டு!

இறந்த பின் இனி வாழ்க்கை இல்லை என்போருக்கும், அல்லது 'மறுபிறவி தான் உண்டு. புதிய வாழ்வு என்பதில்லை' என்போருக்கும் பதில் கூறும் வகையில், 'இறந்தபின் மீண்டும் உயிர்பித்து புதியதோர் வாழ்வுண்டு. அந்த வாழ்வின் நாளே நிரந்தரம். அந்த வாழ்வின் காலமே மறுமை நாளாகும்' என்று அல்லாஹ், மிகத் தெளிவாக அறிவிக்கின்றான்.

**மறுமை நாள் மீது சத்தியம் செய்கின்றேன். பழிப்புக்குரிய ஆன்மாவின் மீதும் சத்தியம் செய்கின்றேன். (மக்கிப்போய் விட்ட) மனிதனின் எலும்புகளை நாம் ஒன்று சேர்க்க மாட்டோம் என மனிதன் எண்ணுகிறானா? அப்படி அல்ல! அவனின் விரல்**

 

**நுனிகளையும் சரியாக அமைக்க நாம் ஆற்றல் உள்ளவர்கள் தாம்.**

**(அல்குர்ஆன் 75:1–4)**

**நிச்சயமாக முன்னோரும், பின்னோரும் குறிப்பிட்ட நாளில் ஒரு நேரத்தில் எல்லோரும் ஒன்று கூட்டப்ப டுவீர்கள் என, (நபியே) நீர் கூறுவீராக! (அல்குர்ஆன் 56:49,50)**

## மறுமை எப்போது வரும்?

'இறந்தபின் வாழ்வுண்டு' என்ற உண்மையை மக்களுக்கு எடுத்துக் கூறும் பணியில் தீவிரமாக இருந்த நபி (ஸல்) அவர் களிடம் அந்த மக்கள், 'மறுமை நாள் வரும் என்கிறீர்களே! அது எப்போது வரும்? என்றும் கேள்வி கேட்கத் துவங்கினர்.

**(நபியே) மறுமையின் நிகழ்வுநேரம் பற்றி உம்மிடம் அவர்கள் 'அது எப்போது வரும்?' என்று கேட்கிறார்கள். அந்த நேரம் பற்றிக்குறிப்பிட உனக்கு என்ன இருக்கிறது? உமது இறை வனிடமே அதன் முடிவு உள்ளது. நிச்சயமாக நீர், அதைப் பயப்படுவோருக்கு நீர் எச்சரிக்கை செய்பவர்தான்'**

**(அல்குர்ஆன் 79:42–45)**

மறுமை நாள் எப்போது ஏற்படும் என்பதன் ரகசியத்தை அல்லாஹ் தன் கையில் வைத்திருப்பதாக கூறுகின்றான். 'அது வரும்' என்பதைக் கூறும் பொறுப்பில் நபி (ஸல்) அவர்கள் இருந்தார்களே தவிர, அந்த நாள் வரும் காலம் பற்றி அவர்கள் கூறவில்லை. கூறும் அதிகாரமும் அவர்களுக்கு இல்லை.

## காரணம் என்ன?

மறுமை நாள் நிச்சயம் வரும் எனும் போது, அந்த வருகின்ற நாளை தெளிவாக அறிவித்திருக்கலாமே! அறிவிக்க தயங்குவது ஏன்? என்ற சந்தேகம் வரலாம்.

**நிச்சயமாக அந்த நேரம் (மறுமையின் நிகழ்வு) வரக் கூடியதாக உள்ளது. உயிரினம் அனைத்தும், தான் செய்ததற்கு ஏற்ப கூலி வழங்கப்பட வேண்டும் என்பதற்காக அந்த நாளை நான் ரகசியமாக வைத்துள்ளேன். (அல்குர்ஆன் 20:15)**

மறுமை நாள் வரும் எனக் கூறும் இறைவன், ‘அது எப்போது வரும்?’ என்பதை மட்டும் ஏன் மறைத்து வைத்துள்ளான் என்பதற்கு சரியான காரணத்தை இந்த வசனத்தில் தெளிவு படுத்துகின்றான்.

ஆம்! இந்த நாளில் இன்ன நேரத்தில் அது வரும் என்பது முன் கூட்டியே அறிவிப்பு செய்யப்பட்டிருந்தால், மனிதர்களின் வாழ்வில் பெரும் குழப்பமே எஞ்சியிருக்கும். இன்ன நேரத்தில் மரணம் [illegible], மறுமை வரும் என்ற செய்தியை அல்லாஹ் மறைத்து வைத்திருப்பதால் தான் உலகம் ஓரளவு அமைதியாக உள்ளது.

பிறக்கும் மனிதனுக்கு இறப்புண்டு. இறப்புக்குப்பின் விசாரணை உண்டு என்ற நம்பிக்கை உள்ளதாலும், மரணம் எப்போது வேண்டுமானாலும் நிகழலாம் என்பதாலும் தான், மனிதன் தன்னைப் பக்குவமாக்கிக் கொள்ள முயல்கிறான். தான் அக்கிரமம் செய்து விடக் கூடாது என்பதில் உறுதியாக இருக்கிறான்.

குறிப்பிட்ட தேதியில் மரணிப்போம் என்று தெரிந்து விட்டால் அந்த தேதி வரும் சில நாட்கள் வரை, அக்கிரமச் செயல்களில் ஈடுபடுவான். மரணம் வரும் போது ‘பாவ மன்னிப்பு’ செய்து கொள்ளலாம் என்று இருந்து விடுவான். மரணம் குறிப்பிட்ட தேதியில் வரும் என்பதை தெரிந்து கொள்ளும் அனைவரும், இவ்வாறே நடக்க ஆரம்பிப்பார்கள். இதனால் கொலை, கொள்ளை, மோசடி, நயவஞ்சகம், துரோகம், விபச்சாரம், போதைப் பொருள் உண்ணுதல் என எல்லாத் தவறுகளும் உலகில் நிரந்தரமாக இருக்கும்.

இதுபோல் தான் மறுமையும். மறுமை நாள் நாம் வாழும் காலத்தில் வந்து விடலாம் எனும் எண்ணம் இருக்கும் வரை மனிதர்களை நல்லவர்களாக வாழச் செய்யும். நாம் வாழும் காலத்தில் வரப் போவதில்லை என்பதை அறியும் நமக்கு என்ன வந்தது? நாம் எப்படியும் வாழலாம்? என்ற எண்ணம் மேலோங்கி, தவறாக வாழ முயற்சிப்பான்.

மறுமையின் நோக்கமே, அந்த நாளில் எல்லோரையும் ஒன்று கூட்டி, செய்யும் செயலுக்கு ஏற்ப கூலி கொடுக்கப் பட வேண்டும் என்பது தான். இந்த நோக்கம் சரியாக நிறைவேற்றப்பட அந்த நாளின் நிகழ்வு, நேரம் இரகசியமாகவே வைக்கப்பட வேண்டும். இதனால் தான் அல்லாஹ்வும் 20:15 வசனத்தில் 'அதை ரகசியமாக வைத்துள்ளேன்' என்று கூறிக் காட்டுகின்றான்.

இதனால் தான் அல்லாஹ், 'விரைவில் அது வரும். எனவே அதை கவனத்தில் கொண்டு நடந்து கொள்ளுங்கள்' என அறிவிக்கின்றான்.

**வானங்களிலும், பூமியிலும் உள்ள இரகசியம் அல்லாஹ்விற்கே உரியது. அந்த நாள் பற்றிய விஷயம் கண்மூடி திறப்பது போன்றோ அல்லது அதை விடவும் குறைவான நேரத்திலோ நடந்து முடிந்து விடும். (அல்குர்ஆன் 16:77)**

**அவர்களை சூழ்ந்து கொள்ளக்கூடிய அல்லாஹ்வின் வேதனை அவர்களுக்கு வராது என்றோ, அல்லது அவர்கள் அறியாமல் இருக்கும் போது திடீரென அந்த நாள் வராது என்றோ அவர்கள் அச்சமில்லாமல் இருக்கின்றார்களா?**

**(அல்குர்ஆன் 12:107)**

எந்த நேரத்திலும் அது நிகழலாம் என அல்லாஹ் கூறுவதால், எச்சரிக்கை உணர்வுடன் நடந்து கொள்ள

வேண்டிய நிலையில் மனிதன் உள்ளான். இந்த எச்சரிக்கை உணர்வுடன் வாழும் போது தான், நற்செயல் மிகுந்த வாழ்க் கையாக அது அமையும். இதன் காரணமாகவே அல்லாஹ் அந்த நாள் வரும் காலத்தை ரகசியமாக வைத்துள்ளான்.

## மறுமை விரைவில் வரும்!

'இன்ன இடத்திற்கு எல்லோரும் வாருங்கள். உங்களுக்கு பரிசு வழங்க உள்ளேன்' என்று ஒருவர் கூறினால் அவரிடம் 'அது எப்போது?' என்று கேட்கலாம். 'சிலருக்கு மட்டுமே பரிசுண்டு, சிலருக்கு தண்டனையும் உண்டு' என்று கூறினால், 'நமக்கு தண்டனையும் கிடைக்கலாம், என்று எண்ணும் ஒருவன், 'அது எப்போது? என்று கேட்பானா? கேட்கமாட்டான். ஆனாலும் அதே மாதிரியான ஒரு காலத்தைப் பற்றிக் கூறும் போது மட்டும் மனிதர்களில் சிலர், 'அது எப்போது நிகழும்' என்று கேட்டுக் கொண்டே தான் உள்ளனர்.

**எதைப் பற்றி அவர்கள் கேட்டுக் கொள்கின்றனர்? மகத்தான அந்த செய்தி பற்றியா? அதில் அவர்கள் தான் கருத்து வேறு பாடுடன் உள்ளார்களே! (அல்குர்ஆன் 73:1–3)**

மறுமை வருமா? என்ற சந்தேகம் ஒரு புறம், எப்போது வரும்? என்ற சந்தேகம் ஒரு புறம் என, அவர்களின் நிலை குழப்பத்தில் இருந்தது. அது வெகு சீக்கிரம் வரும் என அல்லாஹ்வும், அல்லாஹ்வின் தூதரும் அறிவிக்கின்றனர்.

**நிகழப் போகும் (மறுமையின்) வேதனை பற்றி கேள்வி கேட் -பவன் கேட்கிறான். இறை மறுப்பாளர்களுக்கு (அது ஏற்படும் போது) அதைத் தடுப்பவர் எவரும் இருக்கமாட்டார். உயர் வழிகளைப் பெற்ற அல்லாஹ்வின் மூலம் (அது ஏற்படும்). ஒரு நாள் வானவர்களும் (ஜிப்ரீல் எனும்) ஆன்மாவும் அவனிடம் உயர்வார்கள். அந்நாளின் அளவு, ஐம்பதாயிரம் ஆண்டு - களுக்குச் சமமாக இருக்கும். எனவே நீர் அழகிய பொறுமையுடன் இருப்பீராக! அவர்களோ அதை (மறுமையை) வெகு தூரமாகக்**

**காண்கிறார்கள். நாமோ அதைச் சமீபமாகக் காண்கிறோம்.**

**(அல்குர்ஆன் 70:1-7)**

**'. . . இரண்டு நபர்கள் (விற்பனைபுரிய)துணிகளை விரித்து(ப்பார்த்து)க் கொண்டிருப்பார்கள். அதனை அவர்கள் விற்பனை செய்திருக்க மாட்டார்கள். சுருட்டிக் கூட வைத்திருக்கவும் மாட்டார்கள். அதற்குள் மறுமை சம்பவித்து விடும். மேலும் ஒரு மனிதர் மடி கனத்த தமது ஒட்டகத்தி(ல் பால் கறந்து அப்போது தா)ன் பாலுடன் (வீடு) திரும்பி இருப்பார். அதற்குள் மறுமை ஏற்பட்டு விடும். ஒருவர் தமது நீர் தொட்டியை (அப்போதுதான்) கல் வைத்து பூசி இருப்பார். இன்னும் அதில் நீர் கூட இறைத்திருக்கமாட்டார். அதற்குள் மறுமை வந்து விடும். உங்களில் ஒருவர் தமது உணவை (அப்போதுதான்) வாயருகில் கொண்டு சென்றிருப்பார். அதைச் சாப்பிட்டிருக்க மாட்டார், அதற்குள் மறுமை வந்துவிடும் என்று நபி (ஸல்) கூறினார்கள்.**

**அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி), நூல்: (புகாரி 6506)**

மறுமை நாள் வெகு தூரத்தில் இல்லை. சமீபத்தில் உள்ளது. அது நிகழ்வதும் கூட சில வினாடித் துளிகளில் நடந்து முடிந்து விடும் என்பதை இந்த வசனம் - ஹதீஸ் மூலம் அறியலாம்.

## மறுமை வரும். அதை அறிவது எப்படி?

மறுமை எப்போது வரும்? என்ற கேள்விக்கு அல்லாஹ் 'விரைவில் வரும்' என்று பதில் கூறினாலும், மறுமை வரும் என்பதை எப்படி அறிந்து கொள்வது? என்ற கேள்வி கூடவே எழத்தானே செய்யும். இதற்கும் அல்லாஹ் பதில் கூறவே செய்கின்றான்.

**'அவ்வாறல்ல, அவர்கள் அதை விரைவில் அறிவார்கள். மேலும் வெகு சீக்கிரத்தில் அதை அறிவார்கள்'**

**(அல்குர்ஆன் 73:4,5)**

'மறுமை நாள் வரும். வரப்போகிறது, என்பதை அறிந்து கொள்வார்கள் அது வரும்முன், வ[redacted]ன்பதற் கான சில சான்றுகள் உங்கள் முன் நிகழும். அந்தச் சான்று களை வைத்தே அது வரப் போகிறது என்பதை அறிந்து கொள்ளலாம் என்ற கருத்திலேயே, விரைவில் அறிவார்கள் என்று கூறுகிறான்.

## மறுமை வருவதற்கான சில அடையாளங்கள்!

மறுமை நாள் வரும் முன் சில அடையாளங்கள் நிகழும். அந்த அடையாள்ங்கள், மறுமை நாள் நெருங்கிவிட்டது என்பதற்கானச் சான்றுகளாக அமையும். இந்த சான்றுகள் பற்றி அல்லாஹ் திருக் குர்ஆனிலும் குறிப்பிடுகின்றான். நபி (ஸல்) அவர்கள் மூலமாகவும் அறிவிக்கின்றான்.

மறுமை அடையாளங்களில் சிறிய அடையாளங்களும் உண்டு. பெரிய அடையாளங்களும் உண்டு. சில அடையா ளங்கள் நடந்து முடிந்துள்ளன. அந்த அடையாளங்களை நாமும் கண்டு, அனுபவித்துள்ளோம். சில அடையாளங் களோ வெகு விரைவில் ஏற்பட உள்ளன. மறுமை அடையா ளங்கள் பற்றி இனி அறிவோம்.

## சிலை வணக்கம் செய்வர் முஸ்லிம்கள்!

**எனது சமுதாயத்தில் உள்ள சில கோத்திரத்தினர் இணை வைப்பவர்களுடன் சேராத வரை - அவர்களின் சிலைகளை வணங்காத வரை மறுமை நாள் ஏற்படாது. மேலும் எனது சமுதாயத்தில் முப்பது பெரும் பொய்யர்கள் தோன்றுவார்கள் அனைவரும் தம்மை அல்லாஹ்வின் தூதர்கள் என்று வாதிடு வார்கள் நான் நபிமார்களின் முத்திரையாவேன் நிச்சயமாக எனக்குப்பின் எந்த நபியும் கிடையாது என்று நபி (ஸல்) கூறினார்கள்.**

**அறிவிப்பாளர்: ஸவ்பான் (ரலி), நூல்: திர்மிதீ, அபூதாவூத்**

தங்களை முஸ்லிம்கள் எனக் கூறிக் கொள்ளும் சிலர், இன்றும் கூட சிலை வணக்க வழிபாடுகளில் ஈடுபாடு கொள்வதைக் காணலாம். குழந்தை இல்லாத முஸ்லிம் பெண்களில் சிலர், தங்களுக்கு குழந்தை வேண்டி, கோவில்களில் தொட்டில் கட்டிவிடும் நிகழ்ச்சியைக் காண்கிறோம். கோவில் விழாக்களில் முழு அளவில் பங்கெடுக்கும் சில முஸ்லிம்களும் உண்டு. ஓரிறைக் கொள்கைப் படி வாழ வேண்டியவர்கள், சிலை வணக்கத்திலும் ஈடுபடுவது மறுமை நாளின் அடையாளமாகும்.

## அறியாமை பெருகும்!

**'மறுமை நாளுக்கு முன் ஒரு காலகட்டம் வரும். அப்போது அறியாமை நிலவும். கல்வி அகற்றப்படும். 'ஹர்ஜ்' பெருகிவிடும். ஹர்ஜ் என்பது, கொலையாகும்' என்று நபி (ஸல்) கூறினார்கள்.**

**அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி), அபூமூஸா (ரலி)**

**நூல்: புகாரீ 7063**

முன்னோர்கள் வாழ்ந்த காலத்தில் இல்லாத பல வசதிகளை இன்று நாம் அடைந்திருக்கிறோம். ஆனால் முன்னோர்களிடம் இருந்த நற்செயல்களில் பல, நம்மிடம் இல்லை என்பதை ஏற்கத்தான் வேண்டும். அறிவுள்ளவர்களின் நடவடிக்கை நம்மிடம் குறைந்து விட்டது என்பது நம்மிடம் அறியாமையும் குடியேறி விட்டது. என்பதற்கானச் சான்றாகும். அறிவாளிகள் என்று அறியப் படுவோரிடம் அறிவு கெட்ட செயல்கள் மலிந்துள்ளதைக் காணும் போது, மறுமை நாள் மிக அருகில் உள்ளது என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

## விபச்சாரம், குடி அதிகரிக்கும்!

**'கல்வி உயர்த்தப்படுவதும், அறியாமை மேலோங்குவதும், விபச்சாரம் பெருகுவதும், மதுபானம் அருந்தப்படுவதும், ஐம்பது பெண்களுக்கு ஒரு ஆண் நிர்வகிக்கும் அளவுக்கு பெண்கள்**

**அதிகமாகி, ஆண்கள் குறைவதும் மறுமை நாளின் அடையாளங்களாகும்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர்:அனஸ் இப்னு மாலிக் (ரலி)**

**நூல்: புகாரி, முஸ்லிம், அஹ்மத், நஸயீ**

மறுமை நாளின் அடையாளங்களாக விபச்சாரமும், குடியும் பெருகும் என நபி (ஸல்) அவர்கள் குறிப்பிடுவது இன்று உண்மையாகி உள்ளது. விபச்சார விடுதிகளை அரசே அங்கீகாரம் செய்து 'ரெட்லைட் ஏரியா' என ஒரு பகுதியை ஒதுக்கி விபச்சாரம் நடை பெற அனுமதிக்கிறது. நட்சத்திர ஹோர்ட்டல் என்ற பெயரிலும் 'ஹைலெவல்' விபச்சாரமும் அங்கீகாரம் செய்யப்பட்டுள்ளது.

குடியைச் சொல்ல வேண்டியதே இல்லை. குடியைத் தடுக்க வேண்டிய அரசு, குடிபானங்களில் அரசு அங்கீகாரம் பெற்றவை என முத்திரையிட்டு விற்பதைக் காணலாம். அரசே மதுபானக் கடைகளின் ஏகபோக உரிமையாளர் களாக இருப்பது தான் ஆச்சரியம். எப்படியோ, நபி (ஸல்) அவர்கள் கூறிய அடையாளம் உண்மை படுத்தப்பட்டது. இதன் மூலம் மறுமை விரைவில் வரும் என்பது உறுதியாகிறது.

## 'கொலை' அதிகரித்தல்!

**'மறுமை நாளுக்கு முன்பாகக் கொலைகள் மலிந்த ஒரு காலகட்டம் வரும். அப்போது, கல்வி மறைந்து போய் அறியாமை வெளிப்படும்' என்று நபி (ஸல்) கூறினார்கள்.**

**அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) நூல்: புகாரி 7066**

அநியாயமாக ஓர் உயிரைப் பறிக்கும் கொலை பாதகச் செயலை செய்யும் முன் பலமுறை யோசித்தது அந்தக் காலம். இப்போதோ கொலை செய்வதற்கு என கூலிப் படைகள் உண்டு. கையை வெட்ட ஒரு கூலி, காலை எடுக்க ஒரு கூலி, உயிரைப் பறிக்க ஒரு கூலி என 'பேரம்' பேசி கொலை செய்யும் கும்பல் அதிகரித்து விட்டது.

பிடிக்காத நாடுகளில் உயிர் பலிகள் சர்வ சாதாரணமாக நடைபெற, பெரிய நாடுகள் ஏற்பாடு செய்கின்றன. இதனால் குண்டு வெடிப்பும், அணுச்சோதனையும், ரசாயன ஆயுதப் புரட்சியும் மனிதர்களின் அன்றாட நடவடிக்கைகளாக மாறி விட்டன. இதுவும் மறுமை நாள் நெருங்கி விட்டது என்பதற்கு அத்தாட்சிகளாக உள்ளன.

## காலம் சுருங்கும்!

**காலம் சுருங்கும் வரை மறுமை நாள் ஏற்படாது. ஒரு வருடம், ஒருமாதம் போன்றும், ஒரு மாதம் ஒரு வாரம் போன்றும், ஒரு வாரம் ஒரு நாள் போன்றும், ஒரு நாள் ஒரு மணி போன்றும், ஒரு மணி நேரம் என்பது உலர்ந்த பேரீச்ச மர இலை எரியும் நேரம் போன்றதாகவும் இருக்கும்' என்று நபி (ஸல்) கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் :அபூஹுரைரா (ரலி), நூல் :அஹ்மத்**

**(மறுமை நாள் வரும் முன்) காலம் சுருங்கி விடும். செயல்பாடு குறைந்து போகும். மக்களின் உள்ளங் களில் (பேராசையின் விளைவாக) கஞ்சத்தனம் உருவாக்கப்படும். குழப்பங்கள் தோன்றும். ஹர்ஜ் (கொலை) பெருகிவிடும் என்று நபி (ஸல்) கூறினார்கள்.**

**அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி), நூல்: புகாரீ 7061**

காலம் சுருங்கி உள்ளது உண்மைதான். ஒரு காலத்தில் ஒரு ஊருக்குப் பயணம் எனில் பலமாதம், பலவாரம், பல மணிநேரம் என செலவழித்து ஒட்டகை - குதிரை என பயணம் புறப்பட வேண்டும். ஆனால், ஒரு மாத காலம் பயணம் செய்தால் போய் சேர வேண்டிய காலத்தை, சிலமணி நேரங்களில் போய் சேரும் அளவுக்கு விமான வழி போக்குவரத்து மூலம் காலத்தைச் சுருக்கி விட்டோம்.

செய்திகள் பரிமாற பறவை, மிருகம் போன்றவற்றைப் பயன் படுத்தி சில வாரங்களுக்குப் பின் அச்செய்தியை சேர்க்க படாதபாடு பட்ட மனித இனம்; இன்று ஈமெயில்,

இன்டர்நெட் என செய்திகளை உடனுக்குடன் பரிமாறிக் கொள்வது, காலம் சுருங்கி விட்டது, மறுமை வரப்போகிறது என்பதை உணர்த்துகிறது.

## குழப்பங்கள் மலியும்

**விரைவில் குழப்பங்கள் சில தோன்றும். அப்போது அவற்றுக்கிடையே (மௌனமாக) உட்கார்ந்திருப்பவன், (அதற்காக) எழுந்து நிற்பவனைவிடவும், அவற்றுக்கிடையே எழுந்து நிற்பவன், நடப்பவனை விடவும், அதற்காக நடப்பவன் - அவற்றில், ஓடுபவனை விடவும் சிறந்தவன் ஆவான். எவர் இதில் தம்மை ஈடுபடுத்திக் கொள்கிறாரோ, அவரை அவை அழிக்க முயலும். அப்போது ஒருவர் ஒரு புகலிடத்தையோ, பாதுகாப்பிடத்தையோ பெற்றால், அவர் அதன் மூலம் தம்மைத் தற்காத்துக் கொள்ளட்டும் என்று நபி (ஸல்) கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : அபூஹுரைரா (ரலி) நூல்: (புகாரீ 7081)**

குழப்பம் ஏற்படும் போது எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று நபி (ஸல்) அவர்கள் சொல்லித் தருகிறார்கள். குழப்ப நிலை தொடர்ந்து கொண்டே தான் இருக்கிறது. எங்கு பார்த்தாலும் குழப்பமே மிகைத்து நிற்கிறது. நபித்தோழர்களின் காலத்திலேயே ஆட்சியதிகாரப் போட்டி துவங்கியது முதல் இன்று வரை குழப்பம் இருக்கவே செய்கிறது.

மேலும் குழப்ப நிலைகள் தோன்றும் என்பதும் உறுதியாகிறது. அந்த குழப்பத்தின் போது மனிதன் தன்னை விலக்கிக் கொள்வதே சரியான செயலாகும். குழப்பம் தொடர்ந்து கொண்டே இருக்கிறது, இருக்கும் என்பதை கவனிக்கும் போது, மறுமை நாள் மிக நெருக்கத்தில் வர உள்ளது என்பது உறுதியாகிறது.

## தனிமையே விருப்பமாகும்

**'மக்களுக்கு ஒரு காலம் வரும். அப்போது ஒரு முஸ்லிமான மனிதரின் செல்வங்களிலேயே ஆடுதான் சிறந்ததாக இருக்கும். குழப்பங்களில் இருந்து தமது மார்க்க (விசுவாச)த்தைக் காப் பாற்றிட அந்த ஆட்டை ஓட்டிக் கொண்டு அவர் மலை உச்சிக்கும், மழைத் துளிகள் விழும் (கணவாய், பள்ளதாக்கு) பகுதிகளுக்கும் சென்று வாழ்வார்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர்: அபூஸயீத் அல்குத்ரீ (ரலி)**

**நூல் : புகாரீ 6495**

குழப்பம் மலிந்து, ஈமானை பாதுகாத்திட வழி இருக் காதா? என எண்ணும் நிலை வரும். அப்போது தன் ஈமா னைப் பாதுகாக்க ஒரு முஸ்லிம் தன் ஆட்டை ஓட்டிக் கொண்டு, மக்களை விட்டும் தனியே போய் இருக்கும் அளவுக்குச் சூழல் அமையும்.

இப்போது இந்த நிலை வந்துவிட்டது. நமக்கேன் வம்பு? என்று எண்ணும் நிலை உருவாகி, தனிமையே நல்லது என்றாகிவிட்டது. இதுவும் மறுமை நாள் நெருங்கி விட்ட தற்குச் சான்றாகும்.

## வாழும் ஆசை அற்றுப் போய் விடும்

**'ஒரு மனிதர், மற்றொரு மனிதரின் மண்ணறையை (கப்ரை)க் கடந்து செல்லும் போது', 'அந்தோ! நான் இவரின் இடத்தில் (மண்ணறைக்குள்) இருந்திருக்க வேண்டாமா?' என்று (ஏக்கத் துடன்) சொல்லும் காலம் வராத வரை மறுமை நாள் வராது' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி) நூல் : புகாரீ 7115**

தனிமையை விரும்பும் மனிதன் இறுதியில், மரணித்து

விட்டால், இந்த குழப்பத்திலிருந்து தப்பிக்கலாமே! என்று கருதும் அளவுக்கு குழப்பம் மலிந்து போய் இருக்கும். அப்படி ஒரு சூழல் உருவாகிக் கொண்டு வருவதை உணர முடிகிறது.

எதிர்காலத்தில் இது அதிகமாகலாம். குழப்ப நிலை ஏற்பட்டு, தனிமை என்றாகி, இறுதியில் மரணித்தால் நலம் என்று எண்ணும் அளவுக்கு குழப்பம் ஏற்படுவதும் மறுமை நாளின் அடையாளமாகும்.

## தகுதியற்றவனிடம் ஆட்சி இருக்கும்

**'நம்பகத்தன்மை பாழ்படுத்தப்பட்டால், மறுமை நாளை எதிர்பார்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார் கள். அப்போது ஒருவர், 'நம்பகத்தன்மை பாழ்படுவது என்றால் என்ன? இறைத் தூதர் அவர்களே!' என்று கேட்டார். '(ஆட்சியும் அதிகாரமும் என) பொறுப்பு, தகு தியற்றவனிடம் ஒப்படைக்கப்படும் போது மறுமை நாளை எதிர்பார்த்துக் கொள்' என்று நபி (ஸல்) கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : அபூஹுரைரா (ரலி) நூல் :புகாரீ 6496**

தகுதியற்றவனிடம் ஆட்சியும் அதிகாரமும், நீதி நிர்வாகமும் ஒப்படைக்கப்படும் அவலம் தற்போது ஏற்படுத்தப்பட்டு விட்டது என்பதை எவரும் மறுக்க மாட்டார். இறையச்சமும், நேர்மையும் உள்ள ஒருவனே அதிகாரம் பெற்றவனாக இருக்க வேண்டும். இன்றோ, தகுதி இல்லாத நபர்கள் எல்லாம் ஆட்சியாளர்களாக தேர்ந்தெடுக்கப்படும் நிலையைக் காண்கிறோம். இதுவும் மறுமை நாள் சமீபித்து விட்டது என்பதற்கான அடையாளமாகும்.

## மோசமான ஆட்சியாளர் வருவர்

**ஹஜ்ஜாஜ் எனும் ஆளுநர் மூலம் நாங்கள் அனுபவித்து வரும் கொடுமைகள் பற்றி நாங்கள் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்**

**களிடம் முறையிட்டோம். அப்போது, அவர்கள் 'நீங்கள் பொறுமையாக இருங்கள். உங்களிடம் உள்ள இந்த காலத்திற் குப்பின், இதையும் விட மிக மோசமான காலம் வராமல் இருக் காது. இது உங்களின் இறை வனை நீங்கள் சந்திக்கும் வரை தொடரும். இவ்வாறு நபி (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள் ளேன்' என்று கூறினார்கள்.**

அறிவிப்பாளர்: சுபைர் இப்னு அதீ (ரஹ்) நூல் : புகாரீ 7068

**எனது உயிரை தன்கையில் வைத்திருப்பவன் மீது சத்தி - யமாக, உங்கள் இமாமை நீங்கள் கொன்று, சண்டை செய்து கொண்டு உங்களின் உலகத்தை உங்களில் கெட்டவர் ஆட்சி செய்யும்வரை மறுமை நாள் வராது என்று நபி (ஸல்) கூறினார்கள்.**

அறிவிப்பாளர் : ஹுதைபா (ரலி) நூல் : இப்னுமாஜா

காலம் செல்லச்செல்ல ஆட்சியாளரிடம் மோசமான நடவடிக்கை பெருகும். நல்ல ஆட்சியாளரைக் காண்பது அரிதாகும். மறுமை நாள் வரை இது தொடரும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறிய நிலையை, நாம் கண்கூடாகக் காண்கிறோம். மோசமான ஆட்சியாளர்கள் ஆளும் நிலை தொடர்கிறது. இதுவும் மறுமை நாள் மிகமிக அருகில் வந்து விட்டதற்கான அத்தாட்சியாகி விட்டது.

## போர் மூளும்

**'மயிர்களால் ஆன செருப்புகளை அணிந்துள்ள ஒரு சமுதாயத்தவருடன் நீங்கள் போர் செய்யாத வரை மறுமை நாள் வராது. உறுதியான கேடயம் போன்ற முக அமைப்புள்ள ஒரு கூட்டத்தாருடன் நீங்கள் போர் செய்யாத வரை மறுமை நாள் ஏற்படாது' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

அறிவிப்பாளர் :அபூஹுரைரா (ரலி) அறிவிக்கின்றார்கள்

நூல்கள் : புகாரி, முஸ்லிம், திர்மிதீ

தகுதியற்றவனிடம் ஆட்சி தரப்பட்டு, அவனும்

மோசமான செயல் உடையவனாக அமையும் போது, அவனது நடவடிக்கைகள் முழுக்க முழுக்க முஸ்லிம்களுக்கு எதிராகவே இருக்கும். இதன் காரணமாக முஸ்லிம்கள் தாக்கப்படும் அவலம் நீடிக்கும். முஸ்லிம்களும் போர் புரியும் நிர்பந்தத்திற்கு ஆளாவார்கள்.

இந்தப் போரின் உச்சக்கட்டமாக நபி (ஸல்) அவர்கள் மேற்கண்ட ஹதீஸில் குறிப்பிடும் சமூகத்தவருடன் போரிடும் காலம் வரும், அப்போது மறுமை நாள் வரும் அடையாளமாக அது அமையும்.

இப்போதும் கூட முஸ்லிம்கள் வாழும் நாடுகளில் பலவற்றில் முஸ்லிம்களுக்கு எதிரான சூழ்ச்சிகள் தொடர்ந்து கொண்டே இருக்கின்றன. இதனால் சில முஸ்லிம்கள் அந்த நாடுகளில் ஆயுதம் தாங்கி போர் புரியும் நிலைக்கு தள்ளப்பட்டுள்ளனர். இதையும் விட கொடுமை, ஒரே வாதத்தை வைத்தே இருதரப்பார் சண்டை போடுவார்கள் என்பதுதான்.

**'ஒரே வார்த்தை முன் வைக்கின்ற இரு குழுவினர் ஒருவருடன் ஒருவர் போரிட்டுக் கொள்ளாதவரை மறுமை நாள் வராது' என்று நபி (ஸல்) கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் :அபூஹுரைரா (ரலி) நூல் : புகாரீ 3608**

## ஆண்களின் எண்ணிக்கை குறையும்

எனக்குப் பின்னர் வேறு எவரும் உங்களுக்கு அறிவிக்க முடியாத நபிமொழி ஒன்றை (இப்போது) நான் உங்களுக்கு அறிவிக்கப் போகிறேன். நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூற நான் கேட்டுள்ளேன்.

**'கல்வி அகற்றப்படுவதும், அறியாமை வெளிப்படுவதும், மது (அதிகமாக) அருந்தப்படுவதும், விபச்சாரம் பகிரங்கமாக நடைபெறுவதும், ஐம்பது பெண்களுக்கு ஒரே ஆண் நிர்வாகியாக**

**இருப்பான் என்ற அளவுக்கு ஆண்கள் (எண்ணிக்கை) குறைந்து, பெண்கள் (எண்ணிக்கை) அதிகமாவதும் மறுமை நாளின் அடையாளமாகும். இவை ஏற்படாத வரை மறுமை நாள் வராது' என்று நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன்.**

**அறிவிப்பாளர் :அனஸ் இப்னு மாலிக் (ரலி) நூல் : புகாரி 6808**

பயணங்களில் ஏற்படும் விபத்து, போர் கால மரணம் என மரணத்தை அதிகம் அனுபவிப்பது ஆண்கள்தான். இதனால் ஆண் இனம் அழிக்கப்பட்டு வருவது என்பது உண்மை. வரதட்சணை போன்ற காரணங்களுக்காக குழந்தைப் பருவத்திலேயே பெண்கள் கொலை செய்யப்பட்டாலும், இன்றும் ஆண்களின் எண்ணிக்கையை விட பெண்களே அதிகம் உள்ளனர். காலப் போக்கில் இன்னும் கூடுதலாக பெண்களின் எண்ணிக்கை பெருகி, ஆண்களின் எண்ணிக்கை குறையும். இதனால் ஐம்பதுக்கு ஒன்று என்ற கணக்கில் பெண் - ஆண் விகிதாச்சாரம் அமையும்.

அபூமூஸா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவித்து, முஸ்லிமில் பதிவு செய்யப்பட்டுள்ள ஹதீஸில் 'ஓர் ஆணை நாற்பது பெண்கள் இச்சைக் கொண்டு பின் தொடர் வார்கள்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக உள்ளது. இதிலிருந்து பெண்களின் நிலை எந்த அளவுக்கு மோசமாகும் என்பதையும் புரியலாம். இதுபோன்ற நிலை ஏற்படும் போது மறுமை நாள் நெருங்கி விட்டது என்று உணரலாம். இப்போதே ஆண்கள் குறைந்து போவதற்கான அறிகுறியும் தென்படத்துவங்கி விட்டது.

## தாய்க்கு எஜமானியாக மகள் இருப்பாள்

**(மறுமை நாளின் அடையாளமாக) ஒரு பெண், தன் எஜமானியைப் பெற்றெடுப்பாள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : உமர் (ரலி)**

**முஸ்லிம் நூலில் உள்ள நீண்ட ஹதீஸில் ஒரு பகுதி**

எத்தனையோ ஆண் குழந்தைகளைப் பெற்றெடுத்தாலும் இறுதியில் நிர்பந்தம் காரணமாக தன் மகளின் கீழ் வாழும் நிலை ஏற்படும். அப்போது அவள் தன் தாயிடம் எஜமானி போல் நடந்து கொள்வாள்.

பெண் ஒருத்தி, தன் மகளின் ஆதிக்கத்தின் கீழ் வாழும் நிலை உள்ளது என்பதை எவரும் மறுக்க இயலாது. இதுவும் மறுமை நாள் சமீபத்தில் உள்ளது என்பதை உறுதிபடுத்துகிறது.

## சாதாரண மனிதன் உயர் நிலையை அடைவான்

**'ஆடுகள் மேய்க்கும் ஏழைகள், நிர்வாணமாகத் திரிவோர், செருப்பணியாதவர்கள் மிக உயர்ந்த மாளிகைகளை எழுப்புவதும், மறுமை நாளின் அடையாளங்களாகும்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்** அறிவிப்பாளர்:உமர் (ரலி)

**'செருப்பணியாத, நிர்வாணமாகத் திரிவோர், மக்களின் தலைவர்களாக ஆவதும், மறுமைநாளின் அடையாளமாகும்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : அபூஹுரைரா (ரலி)**

**(இந்த இரண்டும் முஸ்லிம் நூலில் இடம்பெறும் ஹதீஸின்** ஒரு பகுதியாகும்.)

**'அற்பனுக்குப் பிறந்த அற்பன் இவ்வுலகிலேயே பாக்கிய சாலியாக ஆகாதவரை மறுமை நாள் ஏற்படாது' என்று நபி (ஸல்) கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : ஹுபைதா இப்னு யமான் (ரலி) நூல் :திர்மிதீ, அஹ்மத்**

மிக, மிக சாதாரண நபர்களும் ஆட்சிக் கட்டிலில் அமர்வதை இன்றும் பார்க்கவே செய்கிறோம். குடிசை களில் வாழ்ந்தோர் கோபுரங்களில் வாழ்கின்றனர். பல அடுக்கு மாடிகள், முன்பு பரம ஏழைகளாக இருந்தோரின்

சொத்தாக இன்று உள்ளது. இவற்றை மறுமை நாளின் அடையாளம் என நபி (ஸல்) அவர்கள் குறிப்பிடுவதிலிருந்து, வெகுவிரைவில் மறுமை நாள் வர உள்ளது என்பதைப் புரியலாம்.

## செல்வம் பெருகும்

**இப்பூமி தனது ஈரல் துண்டை தங்கம், வெள்ளியை தூண்களைப் போல் வாந்தியெடுக்கும் (வெளிப் படுத்தும்) ஒரு திருடன் வந்து, 'இதற்காகத் தான் என் கை வெட்டப்பட்டது' என்பான். கொலைகாரன் வந்து, 'இதற்காகத்தான் நான் கொலை செய்தேன்' என்பான். உறவுகளைப் பிரிந்து வாழ்பவன் வந்து, 'இதற்காகத் தான் என் உறவினர்களைப் பகைத்தேன்' என்பான். (இவற்றை எடுத்துக் கொள்ளுங்கள் என) அவர்களை அழைத்தாலும் அவற்றில் எதனையும் எடுக்க மாட்டார்கள்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : அபூஹுரைரா (ரலி) நூல் :முஸ்லிம், திர்மிதீ**

செல்வத்தை அதிகப்படுத்திட திருடியவனும், அதற்காக கொலை செய்தவனும், இதற்காக உறவினர்களைப் பகைத்து வாழ்ந்தவனும், 'கண் முன் தங்கப் புதையலே குவிந்து கிடந்தாலும், அதை எடுக்க முன் வர மாட்டார்கள். அவர்களிடம் அந்த அளவுக்கு செல்வம் பெருகி நிற்கும். இனி தேவை இல்லை என்று கூறும்அளவுக்கு பொருளாதாரத்தில் தன்னிறைவு பெற்றிருப்பார்கள். இப்படி சொத்தை அதிக அளவில் பெற்றவர்கள் ஒரு சிலர் மட்டுமல்ல, அனைத்து மக்களும் செல்வந்தர்களாக இருப்பார்கள்.

**'நீங்கள் தர்மம் செய்யுங்கள். மக்களிடையே ஒரு காலம் வரும். தன் தர்மப் பொருளை எடுத்துக் கொண்டு செல்வான். ஆனால் அதை வாங்குவோர் எவரும் இருக்கமாட்டார்கள்' என்று**

**நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : ஹாரிஸா இப்னு வஹ்ப் (ரலி) நூல் :புகாரீ 7120**

தர்மம் செய்தால் நன்மை பல உண்டு. தர்மம் செய்வது மனிதனின் இயல்பான குணங்களில் ஒன்று. அதை இப்போதே செய்து கொள்ளுங்கள் என்று நபி(ஸல்) அவர்கள் கூறி, அதற்குரிய காரணமாக இனி வருங்காலத்தில் தர்மப் பொருளை வாங்க ஆள் இல்லாத அளவுக்கு எல்லோரும் செல்வந்தர்களாக இருப்பார்கள்' என்று குறிப்பிடுகிறார்கள்.

இன்றைய அரபு மக்களைப் பாருங்கள். ஒரு காலத்தில் குடிசை வாசிகள் இன்று கோபுரத்தில் வாழும் சீமான்கள். ஒரு காலத்தில் வெளியூர் சென்று வியாபாரம் செய்தாலே வழி என்றிருந்தவர்கள். இன்றோ, மற்ற ஊர்க்காரர்கள் அவர்கள் வாழும் பகுதிக்கு வேலைக்குச் செல்லும் நிலை ஏற்பட்டுள்ளது. அவர்களிடையே தர்மப் பொருள் வாங்கும் நிலையில் உள்ளவர்கள் மிகக்குறைவு தான். அவர்களின் தர்மப்பொருள், மற்ற மற்ற பகுதிகளுக்கு அனுப்பும் நிலைதான் உள்ளது. மறுமை நாள் மிக சமீபத்தில் உள்ளது என்பதற்கு இதுவும் சான்றாக உள்ளது.

## கஞ்சத்தனம் ஏற்படும்

**'(மறுமை நாள் நெருங்கும் போது) காலம் சுருங்கும். செயல்கள் குறையும். மக்களின் உள்ளங்களில் கஞ்சத்தனம் உருவாகும். குழப்பம் தோன்றும். கொலை பெருகும்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : அபூஹுரைரா (ரலி) நூல் :புகாரீ 7061**

இந்த ஹதீஸில் நபி (ஸல்) அவர்கள் 'கஞ்சத்தனம் உருவாகும்' என்று கூறுகின்றார்கள். செல்வம் பெருகி, தர்மம் செய்ய நினைத்து, தர்மப் பொருளைச் சுமந்து

 

சென்று கொடுக்க முன் வந்து, வாங்க ஆளில்லை என்ற நிலை ஏற்படும் போது, விரக்தி காரணமாக கொடுப்பதும் குறையும். கொடுப்பது குறைய குறைய 'கஞ்சத்தனம்' உள்ளத்தில் குடிபுகும் என்பதே உண்மை. எனவே மறுமை யின் அடையாளமாக மனிதனின் உள்ளத்தில் கஞ்சத்தனம் ஏற்படுவதும் ஒன்றாகும்.

## கட்டிடம் கட்டுவதில் போட்டி உருவாகும்

**'மேலும், மக்கள் கட்டிடங்களை (போட்டி போட்டுக் கொண்டு) உயரமாக கட்டாத வரை மறுமை நாள் வராது' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : அபூஹுரைரா (ரலி)**

**இது புகாரீயில் இடம்பெறும் ஹதீஸின் ஒரு பகுதி**

தர்மப் பொருளையும் வாங்க ஆளில்லை என்ற அளவுக்கு செல்வம் பெருகும் போது, அதை செலவழிக்க வழிகாண முயல்வது இயற்கை தான். இருக்கும் பணத்தை வைத்துக் கொண்டு, தன் வீட்டை பெரிய அளவில் கட்ட முனைவான். தன் வீட்டை விட பக்கத்து வீட்டானின் வீடு அழகாக இருந்து விடக் கூடாது என எண்ணுவான்.

இவனின் வீட்டைப் பார்த்து, வீட்டையும் அழகாக அமைத்திட அவன் முயல்வான். உடனே இவன் சமீபத்தில் கட்டிய வீட்டையே இடித்து மீண்டும் கட்ட முயல்வான். இப்படி போட்டி போட்டு கட்டிடங்களை அழகாக அமைக்க முயல்வதும், உயரமான கட்டிடங்களை கட்ட முனைவதும் இப்போது நடந்து கொண்டுதான் இருக்கிறது. இதுவும் மறுமை நாளின் அடையாளம் என்று நபி (ஸல்) கூறிக் காட்டுகிறார்கள்.

## நபி என்று கூறுவோர் வருவர்

**'இரு பெரும் குழுக்களிடையே பெரும் போர் ஏற்பட்டு, அவை ஒன்றுடன் ஒன்று சண்டையிட்டுக் கொள்ளாத வரை மறுமை நாள் வராது. அந்த இரு குழுக்கள் முன் வைக்கும் வாதமும் ஒன்றாவே இருக்கும். மேலும், ஏறத்தாழ முப்பது பெரும் பொய்யர்களான தஜ்ஜால்கள் (உலகில்) தோன்றாத வரை மறுமை நாள் வராது. அவர்களில் ஒவ்வொருவனும் தன்னை 'நபி' என்று வாதாடுவான்' என்று நபி (ஸல்) கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : அபூஹுரைரா (ரலி) நூல் : புகாரீ 3609**

நபி (ஸல்) அவர்கள்தான் இறுதி நபி என்பது இஸ்லாமிய நம்பிக்கை ஆகும். தன்னை நபி என்று சிலர் வாதிட்ட நிலை நபி (ஸல்) அவர்களின் காலத்திலேயே ஏற்பட்டது. யமாமாப் பகுதியில் முஸைலமா என்பவன் தன்னை நபி என்று வாதிட்டான். இவன் அபூபக்கர் (ரலி) அவர்களின் ஆட்சிக் காலத்தில் கொல்லப்பட்டான். இதே போல் யமன் பகுதியில் அஸ்வத் இப்னு அன்ஸியய்யு என்பவன் தன்னை நபி என்று அறிவித்தான். இவனும் நபி (ஸல்) அவர்களின் காலத்திலேயே கொல்லப்பட்டான். அபூபக்கர் (ரலி) அவர்களின் காலத்தில் துலைஹா இப்னு குவைலித் என்பவன் தன்னை 'நபி' என்றான். ஸஜாஹ் என்ற பெண்ணும் தன்னை நபி என்று கூறினாள். இந்த இருவரும் பின்னர் மனம் திருந்தி இஸ்லாத்தில் இணைந்து விட்டனர் என அறியமுடிகிறது.

ஹிஜ்ரீ 60ஆம் ஆண்டுகளில் முக்தார் இப்னு அபீ உபைத் ஸகஃபீ என்பவன் தன்னை நபி என்று வாதிட்டான். அவனும் கொல்லப்பட்டான். அப்துல் மலிக் இப்னு மர்வான் அவர்களின் ஆட்சி காலத்தில் 'ஹாரிஸ்' என்பவன் தன்னை நபி என்றான். அவனும் கொல்லப் பட்டான். அப்பாஸியாக்களின் ஆட்சியின் போதும் பலர் தங்களை நபி என்று வாதிட்டதாகப் பார்க்கிறோம்.

 

இதேபோல் தன்னை நபி என பஞ்சாப் மாநிலம் காதியான் எனும் ஊரில் பிறந்த மிர்சா குலாம் அஹ்மத் என்பவன் வாதிட்டான். 1839-1908 ல் வாழ்ந்தவன் இவன். அஹ்மதியா என்ற பெயரில் புதிய மதம் கண்டான். இன்றும் கூட அவனின் கருத்தை ஏற்றுக் கொண்ட சிலர் உண்டு. இப்படி பலரும் தன்னை நபி என வாதிட்டோர் உண்டு. பலரும் 'நபி' என வாதிட்டாலும் சற்று பலமாக இன்று வாதிடுவோர் முப்பது பொய்யர்கள் தான். நபி (ஸல்) அவர் -களும் இதனால் தான் முப்பது என்ற எண்ணிக்கையைக் குறிப்பிடுகிறார்கள்.

தன்னை நபி எனக் கூறி கொள்ளும் நபர்கள் வருவர் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதிலிருந்தும், அப்படிக் கூறியவர்கள் வந்துள்ளனர் என்பதை அறிவதிலிருந்தும் மறுமை நாள் வெகு விரைவில்வரும் என்பது உறுதியா கிறது.

## பூகம்பம் அதிகரிக்கும்

**கல்வி அகற்றப்படும். பூகம்பங்கள் அதிகரிக்கும். காலம் சுருங்கும். குழப்பங்கள் தோன்றும். கொலை அதிகரிக்கும். செல்வம் கொழிக்கும். அதுவரை மறுமை நிகழாது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : அபூஹுரைரா (ரலி) நூல் : புகாரீ**

ஈரான், எகிப்து, இந்தோனிசியா, சீனா, ஜப்பான், அமெரிக்கா, இந்தியா போன்ற நாடுகளில் பெரும்பெரும் பூகம்பங்கள் நிகழ்ந்தன. இதுமாதிரி இனி பூகம்பங்கள் அடிக்கடி அதிக அளவில் நிகழும் என விஞ்ஞானிகள் அறிவித்துள்ளனர். பூகம்பங்கள் அதிக அளவில் நிகழ்வதும் மறுமை நாள் சமீபத்தில் வர உள்ளது என்பதை பறைசாற்று கின்றன.

## தவறான தொழிலும் நல்லது என ஆகும்

**'ஒரு காலம் வரும், அப்போது மக்கள் தாங்கள் சம்பாதிப்பவை ஹலாலா ஹராமா? (அனுமதிக் கப்பட்டவையா இல்லையா?) என்பதை பொருட்படுத்த மாட்டார்கள்' என்று நபி (ஸல்) கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : அபூஹுரைரா (ரலி) நூல் : புகாரீ**

நல்ல வழியில் சம்பாதிக்க வேண்டும் என்ற எண்ணம் இருந்த காலம் எல்லாம் போய் விட்டது. 'பணம் வேண்டும், சொத்துப் பெருக வேண்டும்' அதற்கு எந்த தொழிலாயினும் செய்யத் தயார் என்ற எண்ணத்திற்கு மனிதன் வந்து விட்டான். தான் செய்யும் தொழில் மூலம் சமூகமே பாதிக்கும் என்று தெரிந்தாலும் அந்தத் தொழிலையே செய்கிறான்.

'இறைவனின் கோபத்தைப் பெற்றுத்தரும் தொழில் இது' எனத் தெரிந்தும் அந்தத் தொழிலையே செய்கிறான். அனுமதிக் கப்பட்டுள்ளதா? இல்லையா? என்ற சிந்தனை எல்லாம் போய் விட்டது. 'நாய் விற்றக் காசு குறைக் கப்போவதில்லை' என்றும், 'சாராயம் விற்றகாசு போதை யாகிவிடப் போவதில்லை' 'கருவாடு விற்றக் காசு நாறாது என்று கூறும் அளவுக்கு தவறான தொழிலும் நல்ல தொழில் என ஆகி விட்டது. இதுவும் 'மறுமை நாள் இதோ வரப் போகிறது' என்று கட்டியம் கூறுகிறது எனலாம்.

## பள்ளிவாசல்கள் பெருமைக்காக அமையும்

**மக்கள் தங்களுக்குள் பெருமையடித்துக் கொள்ளும் வகையில் பள்ளிவாசலைக் கட்டுவர். இது மறுமை நாளின் அடையாளங்களில் ஒன்றாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : அனஸ் (ரலி) நூல் : நஸயீ**

பள்ளிவாசல் தொழுவதற்காக அமைக்கப்படுகின்ற ஒன்று. இறைச் சிந்தனையை சிந்திக்க, இறைவனை வணங்க, அவனை நினைவு கூற பள்ளிவாசல் அவசியம் ஆகும். ஆனால் இன்று பள்ளிவாசல்களோ ஆடம்பர அடையாளங் களாக மாறி நிற்கின்றன.

100 பேர் மட்டும் வாழும் பகுதிகளில் 10,000 பேர் நின்று தொழும் அளவுக்கு பள்ளிவாசல் அமைவதைக் காணலாம். சில ஊர்களிலோ பள்ளிவாசலை அழகு படுத்துகிறோம் என்ற பெயரில் கோடிக் கணக்கில் கொட்டிச் சீரழிப்பதைக் காணலாம். 'எங்களூர் பள்ளிவாசலே பெரும் பள்ளி' என்று கூறிட, பெருமை கொள்ள பள்ளிவாசல் கட்டிடங்கள் அமைக்கப்படுகிறது என்பதே உண்மை. இதுவும் 'மறுமை வர உள்ளது' என்பதை அறிவுறுத்து கிறது.

## இறை நம்பிக்கை (ஈமானில்) தடுமாற்றம்

**'கியாமத் நாளின் ஆரம்பத்தில் (தோன்றுவதற்குமுன்) இரவின் இருள் போல் குழப்பங்கள் ஏற்படும். காலையில் மூமினாக இருந்தவன், மாலையில் காபிராகி விடுவான். சிலர் தங்களின் மார்க்கத்தை இவ்வுலகப் பொருட்களுக்காக விற்பார்கள்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : அனஸ் இப்னு மாலிக் (ரலி) நூல் :திர்மிதீ, அஹ்மத்**

**காலையில் மூமினாக இருந்தவன் மாலையில் காபிராகி விடுவான். மாலையில் மூமினாக இருந்தவன், காலையில் காபிராகி விடுவான் என்பதை ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் விளக்கும் போது, 'பிறரது உயிர், உடமை, மரியாதை, ஆகியவற்றைப் பேணுபவனாக காலையில் இருந்தவன், மாலையில் அவற்றைப் பறிக்கக் கூடியவனாக ஆவான். அதுபோல் மாலையில் பிறரது உயிர், உடமை, கண்ணியம் ஆகியவற்றைப் பேணியவன், காலையில் அவற்றைப் பறிப்பவனாக இருப்பான்' என்று கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : ஹிஷாம் நூல் :திர்மிதீ**

தன்னை மூமின் என்று கூறும் பலரிடம், ஈமான் இவர்களிடம் உள்ளதா? என்று எண்ணும் அளவுக்கு அவர்களின் செயல்கள் அமைந்திருப்பதைக் காணலாம். மார்க்கத்தை அற்பக்காசுக்கும், பதவிக்கும் மாற்றிக் கொள்வோர் உண்டு. இது மூமின்களிடம் ஈமானில் ஏற்படும் தடுமாற்றம் எனலாம். இத்தகையத் தடுமாற்ற நிலை மறுமை நாள் வரப் போகிறது என்பதையே உறுதிப்படுத்துகிறது.

## முஸ்லிமே இருக்க மாட்டான்

**'தவ்ஸ்' இனப் பெண்களின் புட்டங்கள், 'துல்கலஸா கடவுள் சிலையைச் சுற்றி அசையாத வரை மறுமை நாள் வராது. 'துல்கலஸா' என்பது அறியாமைக் காலத்தில் 'தவ்ஸ்' இனமக்கள் வழிபட்டு வந்த சிலையாகும்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

அறிவிப்பாளர் : அபூஹுரைரா (ரலி) நூல் : புகாரீ 7116

**அபூஹுரைரா (ரலி) அவர்கள் இந்த 'தவ்ஸ்' குலத்தைச் சேர்ந்தவர்களே. இக்குலத்தார் இஸ்லாத்தைக் கைவிட்டு இறைமறுப்புக்குத் திரும்பிவிடுவர். ஒழிக்கப்பட்ட 'துல்கலஸா' சிலை வழிபாடு மீண்டும் தலைதூக்கும். அக்குலப் பெண்கள் போட்டியிட்டுக் கொண்டு நெரிசலில் அந்தச் சிலையைச் சுற்றிச் சுற்றி வருவர். நிலைமை இவ்வளவு தூரம் மோசமாகும் அளவு -க்கு மார்க்கம் ஆதரவற்றுப் போய்விடும். அதன் பின்னரே உலக அழிவு நாள் வரும்.**

ஃபத்ஹுல் பாரீ

**'இப்பூமியில் 'அல்லாஹ், அல்லாஹ், என்று கூறக்கூடியவர் இல்லாமல் போகும் வரை மறுமை நாள் வராது' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

அறிவிப்பாளர் : அனஸ் (ரலி)

நூல்கள் :முஸ்லிம், திர்மிதீ, அஹ்மத்

மறுமை நாள் நெருங்கும் வேளையில் மூமின்களை தேடி அலைய வேண்டியதே ஏற்படும். இப்போதும் கூட மூமின்கள் என்று தங்களைக் கூறிக் கொள்வோரிடம் ஈமானிய அடையாளங்களோ, இஸ்லாமிய நடவடிக்கைகளோ இருப்பது அரிதுதான்.

இஸ்லாத்தில் இணையும் முன் தங்களின் குலதெய்வமாக வணங்கிய சிலைகளுக்கு, முக்கியத்துவம் தரும் அளவுக்கு முஸ்லிம்கள் என்று கூறிக் கொள்வோரின் நபர்களின் நிலை மாறி விடும். இதற்கு உதாரணமாகவே 'தவ்ஸ்' இனத்தவர்

பற்றி நபி (ஸல்) அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

சிறிய அளவிலான மாற்றம், காலப்போக்கில் 'அல்லாஹ்' என்று கூறும் நபர்களே இல்லாமல் போகும் அளவுக்கு மாறிவிடும். அப்போது மறுமை நாள் வரும் என்று நபி (ஸல்) கூறுவதிலிருந்தும், அந்த மாற்றத்தை நோக்கி முஸ்லிம்களில் பலர் சென்று கொண்டிருக் கின்றனர் என்பதிலிருந்தும் மறுமை நாள் மிக சமீப த்தில் நிகழப் போகிறது என்பதை அறியலாம்.

## (பெரிய) பத்து அடையாளங்கள்

சிறிய அளவில் ஏற்படும் அடையாளங்கள் அல்லாமல் பெரும் அடையாளங்களாக பத்து அடையாளங்களையும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள்.

**'புகைமூட்டம், தஜ்ஜால், (அதிசயப்) பிராணி, சூரியன் மேற்கிலிருந்து உதிப்பது, ஈஸா நபி (அலை) இறங்கி வருவது, யஹ்ஜுஜ் - மஹ்ஜுஜ் கூட்டத்தினர் வருவது: கிழக்கே ஒன்று, மேற்கே ஒன்று, அரபு தீபப்பகுதியில் ஒன்று என மூன்று நிலச் சரிவுகள் (பூகம்பங்கள்) நிகழ்வது, இவற்றில் இறுதியாக ஏமனிலிருந்து புறப்படும் தீப்பிளம்பு மக்களைவிரட்டி ஒன்றிணைக் குதல் ஆகிய பத்து அடையாளங்களை நீங்கள் காணும் வரை மறுமை நாள் வராது' என்று நபி (ஸல்) கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : ஹுதைபா (ரலி) நூல் :முஸ்லிம்**

இந்த பத்து அடையாளங்களும் தொடர்ந்து ஏற்பட்ட தும், அதன் பின் உலகம் அழியும். மறுமை நிகழும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள்.

**'சூரியன் மேற்கிலிருந்து உதிப்பது, தஜ்ஜால், அதிசயப் பிராணி ஆகிய மூன்று அடையாளங்கள் தோன்றி விடுமாயின், அவற்றுக்கும் முன் இறை நம்பிக்கை (ஈமான்) கொண்டிருந்தால் தவிர, எவருக்கும் அவரது ஈமான் (இறை நம்பிக்கை)**

பயனளிக்காது என்று நபி (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பாளர் : அபூஹுரைரா (ரலி) நூல்கள் : முஸ்லிம், இப்னுமாஜா

'சூரியன் மேற்கிலிருந்து உதிக்கும் வரை அந்த நாள் வரது. அவ்வாறு உதிப்பதை மக்கள் காணும் போது ஈமான் கொள் வார்கள். ஆனால் அது எவருக்கும் ஈமான் பயனளிக்காத நேரமாகும்' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பாளர் : அபூஹுரைரா (ரலி) நூல்கள் :புகாரி, முஸ்லிம், இப்னுமாஜா

அந்த பத்து அடையாளங்களின் மிக பிரதானமான மூன்று அடையாளங்கள் ஏற்படுமாயின் ஈமான் கொள்வது கூட பயனளிக் காது என்பதிலிருந்து அந்த அடையாளங் களின் முக்கியத்துவம் புரியலாம்.

## (1) புகை மூட்டம்

வானம் தெளிவான புகையை வெளிப்படுத்தக் கூடிய நாளை எதிர்பார்ப்பீராக! அப்புகை மனிதர்களைச் சூழ்ந்து கொள்ளும். இது கடுமையான வேதனையாக அமைந்திருக்கும்.

(அல்குர்ஆன் 44:10,11)

உங்கள் இறைவன் உங்களுக்கு மூன்று விஷயங்களைப் பற்றி எச்சரிக்கிறான். அவற்றில் ஒன்று புகை மூட்டம், இது ஒரு (இறை விசுவாசியை) ஜலதோஷம் பிடிப்பது போல் பிடிக்கும். (இறை மறுப்பாளரை) பிடிக்கும் போது அவன் ஊதிப்போவான். அவனது செவிப்பாறை வழியாகை புகை வெளிப்படும். இரண்டாவது (அதிசயப்) பிராணி, மூன்றாவது தஜ்ஜால் என்று நபி (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பாளர் : அபூமாலிக் (ரலி) நூல் : தப்ரானீ

மறுமை நாள் வரப்போகிறது என்பதை எடுத்துக் கூறும் பெரும் அடையாளங்களில் ஒன்று, வானிலிருந்து புகை வருவதாகும். அந்தப் புகை பூமியில் வசிப்போரைத் தாக்கும். இதில் இறைவனை நம்பி வாழும் முஸ்லிமையும் அந்தப்

புகை தாக்கும். ஆனால், அதன் மூலம் ஜலதோஷம் அடைந்தால் ஏற்படும் சிரம அளவுக்கே மூமின் இருப்பான். ஆனால் இறைவனைப் புறக்கணித்து வாழ்ந்தவர்களை அந்தப் புகை நெருங்கும்போது, அதை அவர்கள் சுவாசித்ததும், வயிறு ஊதி, உடலும் பெருத்து, காது வழியாக புகை வருவது தெரியும். கடுமையான சோதனையாக அது அமையும். இந்த புகை மூட்டச் சோதனை வருமாயின் மறுமை நாள் நெருங்கி விட்டது என்பதை அறிந்து கொள்ள வேண்டியது தான்.

## (2) அதிசயப் பிராணி

**அவர்களுக்கு எதிரான தீர்ப்பு உறுதியாகும் போது இப் பூமியிலிருந்து ஒரு பிராணியை நாம் அவர்களுக் காக வெளிப் படுத்துவோம். அப்பிராணி அவர்களுடன் பேசும். (இதற்குக் காரணம்) மக்கள் நம் வசனங்களை நம்பாமல் இருந்தது தான்.**

**(அல்குர்ஆன் 27:82)**

**சூரியன் மேற்கிலிருந்து உதிப்பதும், நண்பகல் நேரத்தில் அந்தப்பிராணி மக்களுக்குக் காட்சி தருவதும் ஆரம்ப அடையாள ங்களாகும். இவ்விரண்டில் எது முதலில் தோன்றினாலும் அதைத் தொடர்ந்து அடுத்ததும் தோன்றி விடும் என நபி (ஸல்) கூறி னார்கள்.**

**அறிவிப்பாளர் : அப்துல்லாஹ் இப்னு அம்ரு (ரலி)**

**நூல் : முஸ்லிம்**

மறுமையின் அடையாளங்களில் ஒன்றாக அதிசயப் பிராணி ஒன்று வரும் என்று அல்லாஹ்வும், நபி (ஸல்) அவர்களும் சுட்டிக் காட்டுகிறார்கள். அந்தப் பிராணி பூமியிலிருந்து தான் வரும் என, திருக்குர்ஆன் கூறுகிறது. வானிலிருந்து அல்ல என்ற உண்மையோடு, அந்தப் பிராணி திடீரென வரும் என்றே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறுகின்றார்கள்.

மனிதர்கள் இதுவரை கண்டு கொண்டிருக்கக்கூடிய பிராணி களில் சேர்ந்தது அல்ல என்பது மட்டும் விளங்க முடிகிறது. அதன் வடிவம் எப்படி இருக்கும் என்பதை தெளிவாக நமக்குத் தெரிவிக்கப் படாவிட்டாலும், அது பேசும் பிராணியாக இருக்கும் என்பதை மட்டும் விளங்க முடிகிறது. பேசும் பிராணியாக அது இருப்பதால் தான் அது அதிசயப் பிராணியாகவும் ஆகிறது.

அந்த அதிசயப் பிராணி வந்து விட்டால், மறுமையின் அடுத்த அடையாளமும் உடனே வந்து விடும் என்றும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். அதிசயப் பிராணி பற்றி நாம் நம்ப வேண்டுமே தவிர, அதன் வடிவம் அது பேசும் மொழி பற்றி கற்பனை செய்து கொண்டிருக்க வேண்டிய தில்லை. அது பகல் வேளையில் வரும் என்பதால் அதை அந்த நேரத்தில் இருப்போர் காணலாம். பேசலாம். அப்பிராணி வரும் நேரத்தில் மக்களில் இறை நம்பிக்கையற்றவர்களே அதிகம் இருப்பார்கள்.

## (3) மேற்கில் சூரியன் உதிப்பது

அதிசயத்தக்க அடையாளங்களில் இதுவும் ஒன்றாகும். மனிதன் இயலாத ஒன்றைக் குறிப்பிடும் போது சூரியன் மேற்கே உதித்தாலும் உதிக்கும். அது நடக்காது என்பார்கள். அந்த அளவுக்கு சூரியன் மேற்கே உதிப்பது என்பது இயலாத காரியம். ஆனால்...

**'சூரியன் மேற்கிலிருந்து உதிக்காமல் மறுமை நாள் ஏற்படாது. அதைக் கண்டதும் மக்கள் (இறைவனை) நம்பு வார்கள். ஆனால் அதற்கும் முன்பே நம்பிக்கை கொள்ளாமல் இருந்தோருக்கு அப்போது கொள்ளும் நம்பிக்கை பயனளிக் காது' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : அபூஹுரைரா (ரலி) நூல் :புகாரீ 6506**

மறுமை நாளின் நெருக்கத்தில் மேற்கிலிருந்து சூரியன்

 

உதயமாகும். சூரியன் கிழக்கில் இருந்து உதித்தால் என்ன நடக்குமோ, அதுதான் மேற்கிலிருந்து உதித்தாலும் நடக்கும் என்று கருதிவிட முடியாது. இந்த மாற்றமான நிகழ்வு, பெரும் பயங் கரத்தை நிகழ்த்தி விடும்.

பூமி, சூரியனைச் சுற்றி வருகிறது. இதனால் இரவு பகல் ஏற்படு கிறது எனப் புரிந்து வைத்துள்ளோம். மணிக்கு ஆயிரம் மைல் வேகத்தில் இந்த பூமி சுழன்று வருகின்றது. இந்த அதி தீவிர சுழற்சியின் போதுதான் சூரியன் கிழக்கில் உதிக்கிறது. திடீரென அந்த வேகச் சுழற்சியை நிறுத்தி எதிர் திசையில் சுற்ற வைத்தால் தான் சூரியன் மேற்கில் உதயமாக முடியும்.

நாம் பயணம் செய்து கொண்டிருக்கக்கூடிய கார் 80 கிலோ மீட்டர் வேகத்தில் செல்கிறது. அப்போது நம் டிரைவர் திடீரென பிரேக் போட்டால் நாம் காரிலிருந்து தூக்கி எறியப்படுவோம். அல்லது காரே தலைகீழாகக் கவிழும். அதே கார் அதே வேகத்தில் திடீரென பின்னோக்கி ஓடினால் என்னவாகும்? விபத்து ஏற்படும் என்பதைச் சொல்லத்தான் வேண்டுமா? மோசமான விளைவு ஏற்படும் அல்லவா?

இது மாதிரியே பூமியின் சுழற்சி திடீரென எதிர் திசையை நோக்கிச் சுழன்று, சூரியன் மேற்கே உதிக்குமானால், நாம் வாழும் கட்டிடங்கள் நொறுங்கி விழும். மலைகள் கூட தூள் தூளாகி விடும். அனைத்தின் செயல்பாடுகளும் இதரக் கோள்களும் தலைகீழ் மாற்றத்திற்குள்ளாகி; உலகமே பேராபத்திலும், பேரழிவிலும் சிக்கிச் சீரழியும்.

இப்படி ஓர் அதிர்வை - அதிர்ச்சியை ஏற்படுத்தும் சூரியன் மேற்கில் உதயமாகின்ற நிலையும், மறுமை நாளின்

அடையாளங்களில் ஒன்றாகும்.

## (4) தஜ்ஜாலின் வருகை

**'நூஹ் (அலை) அவர்களுக்குப்பின் வந்த எந்த நபியும் தஜ்ஜாலைப் பற்றி தனது சமுதாயத்திற்கு எச்சரிக்காமல் விட்டதில்லை. நிச்சயமாக நானும் அவனைப் பற்றி உங்களுக்கு எச்சரிக்கிறேன்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர்: அபூஉபைதா (ரலி) நூல்கள் :திர்மிதீ, அபூதாவூத்**

**'ஆதம் (அலை) அவர்கள் படைக்கப்பட்டது முதல், (மறுமை) நாள் வரும் வரை தஜ்ஜால் விஷயத்தைத் தவிர பெரிய விஷயம் ஏதும் ஏற்படுவதில்லை' என்று நபி (ஸல்) கூறினார்கள்.**

**அறிவிப்பாளர்: இம்ரான் இப்னு ஹுஸைன் (ரலி) நூல்: முஸ்லிம்**

'தஜ்ஜால்' எனும் கொடியவனின் வருகையும் நாளை மறுமை நாள் வருவதற்கு முன் உள்ள அடையாளமாகும். இந்த தஜ்ஜால் பற்றி எல்லா நபிமார்களும் மக்களிடம் எச்சரிக்கை செய்து வந்துள்ளனர். அதுமட்டுமல்ல! இந்த தஜ்ஜாலின் வருகை, பரபரப்பை ஏற்படுத்தும் என்பதால் தான், இவனது வருகையை பெரிய விஷயமாக நபி (ஸல்) அவர்கள் கருதுகிறார்கள்.

## தவறான அறிமுகம்

தஜ்ஜால் பற்றி ஹதீஸ்களில் கூறப்படும் சில செய்திகள், நம் மனித அறிவுக்கு ஏற்றதாக இல்லை எனக் கருதும் சிலர், 'தஜ்ஜால்' என்பதற்கு 'தீயசக்தி' என்ற அளவில் மட்டுமே பெயர் சூட்டுகின்றனர். பிரிட்டிசார் கையில் உலகத்தின் பாதி இருந்தபோது, பிரிட்டனை சில மவ்லவிகள் 'தஜ்ஜால்' என்று வர்ணித்தனர். இன்னும் சிலரோ அவ்வப்போது முஸ்லிம்களுக்கு எதிராக நடந்த சில நாட்டுத் தலைவர் களையும் கூட 'தஜ்ஜால்' என்று வர்ணித்தனர்.

இஸ்லாமியமார்க்கத்தின் தொடர்புகளைக் குறைத்துக் கொண்டிருக்கிற சிலர் தங்களின் கற்பனைக் குதிரையில் உதித்த கதைகளை தஜ்ஜாலின் பெயரால் புனைந்து பரப்பி விட்டனர். 'தஜ்ஜாலின் தலை வானத்துக்கும், கால் தரைக்குமாய் இருக்கும் அளவுக்கு வளர்ந்து இருப்பான். கடலின் நீர் அவனது கரண்டைக் காலுக்கும் கீழே தான் இருக்கும். கடலின் மீனைப் பிடித்து, சூரியனில் காட்டிச் சுட்டுத் தின்பான். பனை மரத்தை வேரோடுப் பிடுங்கி பல் தேய்ப்பான்' என்று அவர்களின் கற்பனைகள் கூறுகின்றன. இவை எதுவும் உண்மை அல்ல!

## சரியான அறிமுகம்

**'நிச்சயமாக அல்லாஹ்வைப் பற்றி உங்களுக்குத் தெரியும். அல்லாஹ் ஒரு கண் ஊனமானவன் அல்லன், ஆனால் தஜ்ஜாலின் வலது கண் திராட்சை போன்று சுருங்கி இருக்கும்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) நூல்கள் :புகாரி, முஸ்லிம்**

**'இறைவனால் அனுப்பி வைக்கப்பட்ட எந்த ஒரு இறைத் தூதரும் தம் சமுதாயத்தவரை பெரும் பொய்யனான ஒற்றைக் கண்ணனை எச்சரிக்காமல் இருந்ததில்லை. அறிந்து கொள்ளுங்கள். நிச்சயமாக அவன் ஒற்றைக் கண்ணன். உங்களின் இறைவன் ஒற்றைக் கண்ணன் அல்ல. அவனது இரு கண்களுக்குமிடையே 'இறை மறுப்பாளன்' என எழுதப்பட்டிருக்கும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : அனஸ் (ரலி) நூல் :புகாரி 7131**

**ஊன மடைந்த கண், மூக்கை ஒட்டிய ஓரத்தில் கடினமான சதைக் கட்டி ஒன்று தென்படும் என்றும் நபி (ஸல்) கூறி உள்ளனர்.**

**நூல்கள் :முஸ்லிம், அஹ்மத்**

**'ஊனமடையாத கண், பச்சைநிறக் கண்ணாடிக் கற்கள்**

போல் அமைந்திருக்கும்'

நூல்:அஹ்மத்

'அவன் வெள்ளை நிறத்தவனாக இருப்பான். அவனின் உடலமைப்பு கவர்ச்சியாக அமைந்திருக்கும்' நூல்:அஹ்மத்

'சற்று குண்டான உடலுடையவனாக இருப்பான்'

நூல்:முஸ்லிம்

'பின்புறத்திலிருந்து பார்த்தால் அவனின் தலைமுடி அலை அலையாய் இருப்பதாகத் தெரியும்' நூல்:அஹ்மத்

'பரந்த நெற்றியுடையவனாக இருப்பான்' நூல்:பஸ்ஸார்

'குள்ளமாகவும் கால்கள் இடைவெளி அதிகம் உள்ளவனாகவும் இருப்பான்' நூல்:அபூதாவூத்

தஜ்ஜால் பற்றிய சரியான அறிமுகம் இது. இது அல்லாத எந்த அறிமுகமும் சிலரால் கற்பனை செய்யப்பட்டதே என்பதை கருத்தில் கொள்க! 'அவனின் ஒரு கண் ஊனம். மறுகண் பச்சை நிறக்கல் போல் இருக்கும்' என்பதுதான் அவனது தோற்றத்தில் வித்தியாசமானவை ஆகும்.

## தஜ்ஜால் எங்கு உள்ளான்?

தஜ்ஜால் இனிமேல் பிறப்பவன் அல்ல. ஏற்கனவே பிறந்தவன் ஆவான். அவன் தற்போதும் இருந்து வருகிறான். இவனை, கிருத்துவராக இருந்து, பின்பு இஸ்லாத்தில் இணைந்த தமீமுத்தார் (ரலி) அவர்கள் நேரில் ஏதேச்சையாக கண்டுள்ளார்கள். அவனை, தான் கண்ட விபரத்தை நபி (ஸல்) அவர்களிடம் கூறியபோது அதை நபி (ஸல்). அவர்கள் அங்கீகாரம் செய்துள்ளார்கள். தஜ்ஜால் பற்றிய இதர விபரம் அந்த ஹதீஸ் மூலம் நமக்குப் புரிகிறது.

நபி (ஸல்) அவர்களின் (தொழுகைக்கான) அழைப்பாளர், 'அஸ்ஸலாத்து ஜாமிஆ' (தொழுகைக்கான நேரம்

வந்துவிட்டது) என்று அறிவித்தார். இதைக் கேட்ட நான் பள்ளிவாசலுக்குச் சென்றேன். நபி (ஸல்) அவர்களுடன் தொழுதேன். தொழுது முடித்ததும், நபி (ஸல்) அவர்கள் சிரித்துக் கொண்டே மிம்பரில் அமர்ந்தார்கள். 'அனை வரும் தொழுத இடத்திலேயே அமருங்கள்' என்று கூறி விட்டு 'நான் உங்களை ஏன் கூட்டினேன் என்பதை அறிவீர்களா? என்று கேட்டார்கள். 'அல்லாஹ்வும் அவனின் தூதருமே நன்கறிந்தவர்கள்' என்று நாங்கள் கூறினோம்.

அல்லாஹ்வின் மீது சத்தியமாக, உங்களை அச்சுறுத் தவோ ஆர்வமூட்டவோ உங்களை நான் ஒன்று கூட்ட வில்லை. தமீமுத் தார் முன்பு கிருத்தவராக இருந்தவர். அவர் வந்து இஸ்லாத்தில் இணைந்து விட்டார். தஜ்ஜால் பற்றி உங்களுக்குக் கூற வந்ததுக்கேற்ப அவர் ஒரு செய் தியை என்னிடம் கூறினார். (அவர் என்னிடம் கூறியதை நீங்களும் கேளுங்கள்)

லக்ம், ஜுகாம் ஆகிய சமூகத்தில் முப்பது நபர்களுடன் கப்பலில் நான் பயணம் செய்தேன். (புயல் காரணமாக) ஒரு மாதகாலம் அலைகளால் அலைகழிக்கப்பட்டோம். சூரியன் மறையும் சமயம் ஒரு தீவில் ஒதுங்கினோம். கப்பலில் வைத்திருந்த சிறு தோணிகள் மூலம் அந்த தீவில் நுழைந்தோம். அப்போது உடல் முழுதும் மயிர்கள் நிறைந்த ஒரு பிராணி எதிர் கொண்டது. அதிகமான மயிர்கள் காரணமாக அதன் மலஜலம் பாதைகளை (உறுப்புக் களைக்) கூட அவர்களால் அறிய இயல்வில்லை.

அந்தப் பிராணியிடம் அவர்கள், 'உனக்கு ஏற்பட்ட கேடே! நீ என்ன பிராணி?' என்று கேட்டனர். 'ஜஸ்ஸாஸா' என்று அது கூறிவிட்டு, 'நீங்கள் இதோ இந்த மடத்தில் உள்ள மனிதனிடம் செல்லுங்கள். அவர் உங்களைக் காண்பதில் ஆர்வம் காட்டுவார்' என்றும் அப்பிராணி

கூறியது. அந்த மனிதனின் பெயரையும் கூறியது. அந்தப் பிராணி ஒருபெண் ஷைத்தானாக இருக்குமோ என்று பயந்தோம்.

நாங்கள் அந்த மடத்தை நோக்கி விரைந்தோம். அங்கு சென்றதும் ஒரு மனிதனைக் கண்டோம். அவனைப் போன்ற ஒரு படைப்பை இதுவரை நாங்கள் பார்த்ததே இல்லை. இரண்டு கரண்டை கால்களுக்கும் முட்டுக்கால் களுக்கும் இடையே தலையைச் சேர்த்து கழுத்தில் இரும்பால் கட்டப்பட்டிருந்தான், 'உனக்கு ஏற்பட்ட கேடே! ஏனிந்த நிலை!' என்று கேட்டோம்.

அதற்கு அந்த மனிதன் '(எப்படியோ) என்னைப் பற்றி அறிந்து விட்டீர்களே! நீங்கள் யார்? எனக் கூறுங்கள்' என்றான். 'நாங்கள் அரபியர்கள். ஒரு கப்பலில் நாங்கள் பயணம் செய்தபோது, ஒரு மாதம் கடல் அலையால் அலைகழிக்கப்பட்டோம். இப்போது தான் இந்த தீவிற்கு வந்தோம். அடர்ந்த மயிர்கள் நிறைந்த ஒரு பிராணியைக் கண்டோம். அது, நான் ஜஸ்ஸாஸா. இந்த மடத்தில் உள்ள மனிதரைப் பாருங்கள்' என்று கூறியது. எனவே உம்மிடம் விரைந்து வந்தோம்' என்று கூறினோம்.

'பைஸான் என்ற இடத்தில் உள்ள பேரீத்தம் மரங்கள் பயனளிக்கிறதா? என்று கூறுங்கள்' என அந்த மனிதன் கேட்டான். நாங்கள் ஆம் என்று கூறினோம். அதற்கு அம்மனிதன் 'விரைவில் அங்குள்ள மரங்கள் பயனளிக் காமல் போகலாம்' என்றான். 'சூகர் எனும் நீரூற்றில் தண்ணீர் உள்ளதா? அங்குள்ளவர்கள் அத் தண்ணீரை விவசாயத்திற்கு பயன்படுத்துகிறார்களா? என்று கேட்டான். அதற்கு நாங்கள் 'ஆம், தண்ணீர் அதிகமாகவே உள்ளது. அங்குள்ளோர் அத்தண்ணீர் மூலம் விவசாயம் செய்கின்றனர்' என்று கூறினோம்.

'உம்மி சமுதாயத்தில் தோன்றக்கூடிய நபியின் நிலை என்ன? என்பதை எனக்குக் கூறுங்கள்' என அம்மனிதன் கேட்டான். 'அவர் மக்காவிலிருந்து புறப்பட்டு, தற்போது மதீனாவில் உள்ளார்' என்று கூறினோம். 'அரபியர்கள் அவருடன் போர் புரிந்தார்களா?' என்று அம்மனிதன் கேட்டான். ஆம் என்றோம். 'போரின் முடிவு எப்படி இருந்தது?' என்று கேட்டான். 'அவன் தன் அருகில் வசித்த அரபியரையெல்லாம் வெற்றி கொண்டு விட்டார்' என்று கூறினோம். 'அவருக்கு அவர்கள் கட்டுப்படுவதே சிறந்தது' என்று அவன் கூறினான்.

நான் இப்போது என்னைப் பற்றிக் கூறுகிறேன். நான்தான் தஜ்ஜால். நான் (இங்கிருந்து) வெளியேற வெகுசீக்கிரம் எனக்கு அனுமதி தரப்படலாம். அப்போது நான் வெளியே வருவேன். பூமி முழுதும் பயணம் செய்வேன். நாற்பது நாட்களில் எந்த ஊரையும் நான் அடையாமல் விட மாட்டேன். மக்கா, மதீனா இரு ஊர் களைத் தவிர. அந்த இரு ஊர்களும் எனக்கு தடுக்கப் பட்டுள்ளன. அந்த இரண்டு ஊர்களுக்குள் நான் நுழைய முயற்சிக்கும் போதெல்லாம் தன் கையில் வாளுடன் ஒரு வானவர் என்னை எதிர் கொண்டு தடுப்பார். அதன் வழிகள் அனைத்திலும் அதைக் காக்கின்ற வான வர்கள் இருப்பர்' என்று அம்மனிதன் கூறினான்.

இவ்வாறு தமீமுத்தாரீ (ரலி) தன்னிடம் கூறியதாகக் கூறிய நபி (ஸல்) அவர்கள் தம் கைத்தடியை மிம்பரில் தட்டிவிட்டு, 'இது (மதீனா) தூய்மையான நகரம், தூய்மையான நகரம்' என்று கூறினார்கள். 'இதே செய்தியை நான் உங்களிடம் கூறி இருக் -கிறேன் தானே' என்று மக்களிடம் நபி (ஸல்) அவர்கள் கேட்டதும், மக்கள் 'ஆம்' என்று பதில் கூறினர்.

**அறிந்து கொள்க நிச்சயம் அவன் சிரியா நாட்டின் கடல் பகுதியில் உள்ளான். அல்லது ஏமன் நாட்டின் கடல் பகுதியில் உள்ளான். இல்லை, இல்லை! அவன் கிழக்குத் திசையில் இருக்கிறான் என்று மூன்று முறை கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : பாத்திமா பின்த் கைஸ் (ரலி) நூல் : முஸ்லிம்**

தஜ்ஜால் என்பவனை பார்த்தோரில் முக்கியமானவர், தமீமுத் தாரி (ரலி) அவர்கள் ஆவார். அவர்களும் கூட கடல் பயணத்தின் போது, புயலால் திசை மாறி, ஒரு தீவுக்கு ஒதுங்கியதால் அது எந்தப் பகுதி என்பதை சரிவர புரிந்து கொள்ள இயலாததால் குறிப்பிட்ட இடம் பற்றி அவர்களால் கூற இயலவில்லை. இதனால் தான் நபி (ஸல்) அவர்களும் கூட தமீமுத்தாரி (ரலி) அவர்களின் தகவல் அடிப்படையில் மூன்றில் ஒரு பகுதியாக இருக்கக்கூடும் என்று அறிவிக்கின்றார்கள். அவன் இருக்கும் இடம் இதுதான் என்பது தெளிவாக தெரியாவிட்டாலும், ஒரு கடல்கரைத் தீவில் அவன் இருக்கிறான் என்பது மட்டும் உறுதியாகிறது.

## தஜ்ஜால் ஒரு காபிர்!

தங்களை நபி என்று வாதிடுவோர் பற்றி நபி (ஸல்) அவர்கள் கூறும்போது, அவர்களை 'தஜ்ஜால்கள்' என்று குறிப்பிடுகிறார்கள். எனவே இந்த தஜ்ஜாலை அவர்களில் ஒருவனாக கருதிவிடக் கூடாது.

பொதுவாக முஸ்லிம்களை வழிகெடுக்கும் பணியில் ஈடுபடுவோரில் ஒரு சாரார் தங்களையும் முஸ்லிம் என்று கூறிக் கொண்டே வழிகெடுப்பர். மற்றொரு சாராரோ தங்களை முஸ்லிம் எனக் கூறாமல் முஸ்லிம்களை இஸ்லாத்தை விட்டும் வெளியேறச் செய்யும் பணியில் ஈடுபடுவார்கள். நபி என்று கூறி வழிகெடுத்த தஜ்ஜால்கள் (பொய்யர்கள்) முதல் வகையினர். இந்த தஜ்ஜாலோ இதில் இரண்டாம் வகையினரைச் சேர்ந்தவன்.

**'தஜ்ஜாலின் நெற்றிக்கிடையே 'காபிர்' என்று எழுதப் பட்டிருக்கும். எழுதத் தெரிந்த, எழுதத் தெரியாத அனைத்து**

**மூமின்களும் அதைப் படிப்பார்கள்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பாளர் : ஹுதைபா (ரலி) நூல் :முஸ்லிம்**

**'இஸ்பஹான் பகுதியைச் சேர்ந்த யூதர்களில் ஒருவனாக தஜ்ஜால் வெளிப்படுவான்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : ஆயிஷா (ரலி) நூல் : அஹ்மத்**

தஜ்ஜால் இயற்கையிலேயே காபிர். யூதன் என்பதே சரி! தங்களை நபி என்று வாதிடுவோரை 'தஜ்ஜால்' எனக் குறிப்பிடுவது, அவனைப் போல் இவர்கள் குழப்பவாதிகளாகவும், பொய்யர்களாகவும் இருந்ததுதான். எனவே அவர்களில் ஒருவனாக இவனைக் கருதக் கூடாது.

## தஜ்ஜால் தன்னைக் கடவுள் எனக் கூறுவான்

**'தஜ்ஜால் பிறவிக் குருடையும், வெண் குஷ்டத் தையும், நீக்குவான் இறந்தவர்களை உயிர்ப்பிப்பான். மக்களிடம் 'நானே கடவுள்' என்பான். நீதான் என் கடவுள் என்று ஒருவர் கூறினால், அவன் சோதனையில் தோற்றவனாவான். 'அல்லாஹ் தான் என் இறைவன்' என்று ஒருவர் கூறி, அதிலேயே அவர் இறந்தால், அவர் தஜ்ஜாலின் சோதனையிலிருந்து விடுபட்டவர் ஆவார்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

அறிவிப்பாளர் : ஸமுரா இபனு ஜுன்துப் (ரலி) நூல்கள் : அஹ்மத், தப்ரானீ

தன்னை கடவுள் எனக் கூறியும், கடவுளாக ஏற்க வேண்டும் என்று கூறியும் தஜ்ஜாலின் குழப்ப நிலைத் தொடரும்.

## தஜ்ஜாலின் மாயாஜாலங்கள்

**'வானத்திற்கு மழை பொழியுமாறு கட்டளையிடுவான். மழை பொழியும். பூமியை நோக்கி விளையச்செய்! என்பான். அது பயிர்களை முளைக்க வைக்கும்' என்று நபி (ஸல்) கூறினார்கள்.**

அறிவிப்பாளர் : நவ்வாஸ் இப்னு ஸம்ஆன் (ரலி) நூல் :முஸ்லிம்

கட்டுடல் உடைய ஓர் இளைஞனை அழைப்பான். அவனை இரண்டு துண்டுகளாக வாளால் வெட்டு வான். பிறகு அவனைக் கூப்பிடுவான். உடனே அந்த இளைஞன் சிரித்துக் கொண்டே, பிரகாசமான முகத் துடன் உயிர் பெறுவான்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: நவ்வாஸ் இப்னு ஸம்ஆன் (ரலி) நூல்கள் :முஸ்லிம், திர்மிதீ

'ஒரு மனிதனைக் கொன்று அவன் உயிர்ப்பிப்பான். மற்ற வர்கள் விஷயத்தில் அவனால் இவ்வாறு செய்ய இயலாது' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பாளர் : அன்சாரி நபித் தோழர் நூல் :அஹ்மத்

அவனைப் பின்பற்றியவர்கள் தவிர, மற்ற மக்கள் மிகவும் வறுமையின் பிடியில் இருக்கும் போது, அவனிடம் மலை போல் ரொட்டி இருக்கும். அவனிடம் இரண்டு நதிகள் இருக்கும். ஒன்றை அவன் சொர்க்கம் என்பான். இன்னொன்றை நரகம் என்பான். அவன் சொர்க்கம் எனக் கூறும் நதி, உண்மையில் நரகமாகும். அவன் நரகம் என்று கூறும் நதியோ சொர்க்கமாகும். மழைபொழிந்திட வானத்திற்கு கட்டளையிட்டதும், மக்கள் பார்க்கும் போதே மேகம் மழை பொழியும். 'இதைக் கடவுளைத் தவிர வேறுயாரும் செய்ய முடியுமா?' என்று கேட்பான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர் : ஜாபிர் (ரலி) நூல் :அஹ்மத்

இப்படி பல அற்புதங்களைச் செய்யும் இவனின் வலையில் முஸ்லிம்களும் வீழ்வர். சாதாரணமாக முஸ்லி மல்லாத ஒருவன் வந்து ஒரு அற்புதம் செய்து காட்டினால் ஈமானை இழந்து விடும் முஸ்லிம்களும் உண்டு. இவ்வாறு இருக்க பல அற்புதங்கள் செய்யும் தஜ்ஜாலை சில முஸ்லிம் களும் நம்புவர் என்பதில் ஆச்சரியம் இல்லையே!

## தஜ்ஜாலை புறக்கணிப்போர் நிலை

'...பின்னர் மக்களிடம் வருவான். (தன்னை கடவுள் என

ஏற்கும்படி) அழைப்பான். அவனை மக்கள் ஏற்க மறுப்பார்கள். அவர்களை விட்டு அவன் விலகிச் செல்வான். காலையில் (அவனை ஏற்க மறுத்த)மக்கள், தங்களின் அனைத்துச் செல்வங்களையும் இழந்து நிற்பார்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர் :நவ்வாஸ் இப்னு ஸம்ஆன் (ரலி) நூல் :முஸ்லிம்

தஜ்ஜாலை ஏற்க மறுத்துப் புறக்கணிப்போர், அவனை ஏற்க மறுத்து விட்டால், தங்களின் சொத்தை இழக்க வேண்டியது வரும். இந்த நிலையை ஏற்படுத்து வதும் அவன் தான்.

## தஜ்ஜாலிடம் நடந்து கொள்ள வேண்டிய முறை

'தஜ்ஜாலிடம் தண்ணீரும், நெருப்பும் இருக்கும். மக்கள் எதைத் தண்ணீர் என்று காண்கிறார்களோ, அது சுட்டெரிக்கும் நெருப்பாகும். மக்கள் எதை நெருப்பு என்று காண்கிறார்களோ, அது சுவை மிகுந்த குளிர்ந்த தண்ணீராகும். உங்களில் ஒருவர் இந்த நிலையை அடைந்தால், நெருப்பு எனக் காண்பதில் விழட்டும்!' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பாளர் : ஹுதைபா (ரலி) நூல்கள் :புகாரி, முஸ்லிம்

அவன் சொல்வதற்கு நேர்மாறான காரியங்களில் ஈடுபடுவது மூலம் மட்டுமே முஸ்லிம்கள் தங்களின் ஈமானைப் பாதுகாத்துக் கொள்ள முடியும்.

## தஜ்ஜால் வாழும் காலம்

தஜ்ஜால் பூமியில் எவ்வளவு காலம் இருப்பான்? என்று நாங்கள் கேட்ட போது, 'நாற்பது நாட்கள் இருப்பான். ஒருநாள், ஒரு வருடம் போன்றும் : மறு நாள் ஒரு மாதம் போன்றும், மறுநாள் ஒரு வாரம் போன்றும், மற்ற நாட்கள் சாதாரண நாட்கள் போன்றும் இருக்கும்' என்று நபி (ஸல்) அவர்கள் பதில் கூறினார்கள்.

அறிவிப்பாளர் : நவ்வாஸ் இப்னு ஸம்ஆன் (ரலி) நூல்கள் :முஸ்லிம், திர்மிதி

## தஜ்ஜால் போக இயலாத ஊர்கள்

**'மதீனா நகருக்கு தஜ்ஜால் பற்றிய பயம் தேவை இல்லை. அன்றைய நாளில் மதீனாவுக்கு ஏழு நுழைவு வாயில் (பாதைகள்) இருக்கும். ஒவ்வொரு பாதையின் நுழைவாயிலிலும் இரண்டு (வானவர்)கள் இருப்பார்கள்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : அபூபக்ரா (ரலி) நூல் :புகாரீ**

**'அவன் நாற்பது நாட்கள் பூமியில் வாழ்வான். அனைத்து இடங்களுக்கும் அவன் செல்வான். ஆனால் மஸ்ஜிதுல் ஹராம், மதீனா பள்ளிவாசல், தூர் மஸ்ஜித், பைத்துல் முகத்தஸ் ஆகிய நான்கு பள்ளிவாச[illegible] அவனால் நெருங்க இயலாது' என்று நபி (ஸல்) கூறினார்கள். நூல்:அஹ்மத்**

## தஜ்ஜாலிடமிருந்து தப்பிக்க . . .

தஜ்ஜால் ஏற்படுத்தும் குழப்ப நிலைகளிலிருந்து தங்களைக் காப்பாற்றி, ஈமானையும், பாதுகாத்திட இரண்டு வழிகளை நபி (ஸல்) அவர்கள் தஜ்ஜாலைக் காணும் மக்களுக்காக கற்றுத் தருகிறார்கள்.

(1) தொழுகையில் அத்தஹிய்யாத்தின் இறுதியில் நான்கை விட்டும் பாதுகாப்[illegible] தேட நபி (ஸல்) அவர்கள் கூறி உள்ளார்கள்.

'அல்லாஹும்ம [illegible] அஊது பிக்க மின்ஃபித்னதித் தஜ்ஜால் '(இறைவா! தஜ்ஜாலின் குழப்பத்தை விட்டும் உன்னிடம் நான் பாதுகாப்புத் தேடுகிறேன்). தொழுகையில் இதைத் தொடர்ந்து ஓதிப் பிரார்த்திக்கும் எவரும் தஜ்ஜால் பின்னே போக மாட்டார்கள். தொழாதவர்களும், தங்களின் பிரார்த்தனையில் இதைக் கேட்காத வர்களும் தஜ்ஜாலின் மாயா ஜாலங்களில் மயங்கி ஈமானை இழப்பார்கள். அவன் பின்னே அவனை ஏற்றுச் செல்வார்கள்.

**(2) உங்களில் ஒருவர் தஜ்ஜாலை அடைந்தால், 'கஹ்பு'**

**அத்தியாயத்தின் ஆரம்ப பகுதியை ஓதிக் கொள்ளட்டும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் :நவ்வாஸ் இப்னு ஸம்ஆன் (ரலி) நூல்கள் :முஸ்லிம், திர்மிதீ**

இந்த இரண்டு வழிகள் மூலமே தஜ்ஜாலில் மாயாஜாலக் குழப்பங்களில் இருந்து தப்பிக்க இயலும்.

## தஜ்ஜால் கொல்லப்படும் இடம்

**தஜ்ஜால் கீழ்த் திசையிலிருந்து மதீனாவை குறிக்கோளாகக் கொண்டு புறப்பட்டு வருவான். அப்போது மலக்குகள் அவனது முகத்தை ‘ஷாம்’ பகுதியை நோக்கித் திருப்புவார்கள். அங்கே தான் அவன் அழிவான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் :அபூஹுரைரா (ரலி) நூல்கள் :புகாரி, முஸ்லிம்**

**கஸ்பஹான் பகுதியில் வாழும் யூதர்களில் ஒருவனாக தஜ்ஜால் புறப்பட்டு வருவான். மதீனாவை நெருங்கி, அதன் எல்லையி[illegible]துவான். அன்றைய தினம் மதீனாவுக்கு ஏழு நுழை[illegible]ள் இருக்கும். ஒவ்வொரு நுழைவு பாதையிலும் இ[illegible] மல[illegible]குகள் இருப்பார்கள். அவனை நோக்கி ([illegible]னாவில் உள்ள) தீயு[illegible]க்கள் புறப்பட்டுச் செல்வார்கள். பாலஸ்தீன் நகரின் ‘[illegible]’ எனும் வாசலுக்கு அவன் புறப்பட்டுச் செல்வான். [illegible]கே ஈஸா நபி (அலை) அவர்கள் இறங்கி அவனைக் கொல்வார்கள். அதன்பின் நாற்பது ஆண்டுகள் ஈஸா நபி (அலை) அவர்கள் இந்த பூமியில் நேர்மையான தலைவராக, சிறந்த நீதிவானாகத் திகழ்வார்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பாளர் : ஆயிஷா (ரலி) நூல் :அஹ்மத்**

ஒற்றைக் கண்ணனான, காபிர் என நெற்றியில் எழுதப் பட்டுள்ள தஜ்ஜால் மக்களிடையே வந்து, சில மாயாஜாலச் செயல்களில் ஈடுபட்டு, நாற்பது நாட்களில் உலகம் முழுவதும் சுற்றி வந்து, மக்களை வழிகெடுக்கும் படியான

செயலில் ஈடுபடுவான் என்பது, மறுமை நாள்வரும் முன் நடக்கக் கூடிய செயலாகும்.

தஜ்ஜாலின் வருகை மூலம், மறுமை நாள் மிக மிக .... அருகில் வந்து விட்டது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். மறுமை நாளின் அடையாளமாக நபி (ஸல்) அவர்கள் கூறியவற்றில் பல நடந்து முடிந்து விட்டது போல், இதுவும் நடக்கும் என்ற உண்மையை நம் மனதில் நிறுத்திக் கொள்ள வேண்டும்.

மக்களை ஏமாற்றும் எவரும் தங்கள் பிரச்சாரத்தை பெண்களிட மிருந்தே துவங்குகின்றனர். தங்கள் மீது பெண்களுக்கு உறுதியான நம்பிக்கை ஏற்படுத்துவதற்காக சில போலி விளம்பரங்களையும் பொய்யான வாக்குறுதி களையும் கூறிப் பெண்களை நம்ப வைக்கின்றனர். இதே வழிமுறையைத் தான் தஜ்ஜாலும் கையாளுவான். அதிக மான பெண்கள் அவனைப் பின்பற்றிச் செல்வார்கள். ஒரு குடும்பத்தில் மார்க்கத்தைச் சரியாக விளங்கிக் கொண்ட ஆண்கள் பலர் இருந்தாலும், அந்தக் குடும்பத்தில் உள்ள பெண்கள், தர்ஹாக்களுக்குச் செல்வதையோ, அனாச் சாரங்கள் புரிவதையோ பிரச்சாரம் செய்தாலும் கூட தடுத்து நிறுத்த முடிவதில்லை. இதே நிலைதான் தஜ்ஜால் வரும்போதும் நிகழும்.

**'மரீகனாத் என்னும் இந்த உவர் நிலங்களுக்கு தஜ்ஜால் புறப்பட்டு வருவான். அப்போது அதிகமான பெண்கள் அவனைப் பின்பற்றிச் செல்வார்கள். எந்த அளவுக்கெனில், (அன்று) ஒவ்வொரு ஆணும் தனது மனைவி, தாய், மகள், சகோதரி, மாமி ஆகியோரிடம் சென்று அவர்கள் தஜ்ஜாலைப் பின்பற்றிச் சென்றுவிடக் கூடாது என அஞ்சி, அவர்களைக் கயிற்றினால் கட்டி வைப்பான்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பவர் இப்னு உமர் (ரலி) நூல்:அஹ்மத்**

அல்லாஹ்வின் மீது உறுதியான நம்பிக்கையில்லாத ஆண்கள், பெண்கள் மற்றும் நயவஞ்சகர்கள் அனைவரும் தஜ்ஜாலின் அற்புதங்களில் மதி மயங்கி, தங்கள் ஈமானை இழந்து அவனைப் பின்பற்றிச் செல்வார்கள். எனினும், ஆண்களை விட பெண்களே அதிக அளவில் தஜ்ஜாலைப் பின்பற்றுவார்கள் என்று இந்த நபிமொழி கூறுவதால், பெண்கள் கூடுதலான எச்சரிக்கையுடன் இருந்து கொள்ள வேண்டும். தஜ்ஜாலின் சோதனையிலிருந்து இறைவனிடம் பாதுகாப்புத் தேடிய வண்ணம் இருக்க வேண்டும்.

## (5) ஈஸா நபியின் வருகை

**நிச்சயமாக அவர் (ஈஸா) மறுமை நாளின் அடையாளமாவார். இதில் அறவே சந்தேகம் கொள்ளாதீர்கள். என்னைப் பின்பற்றுங்கள். இதுதான் நேரான வழியாகும். (அல்குர்ஆன் 43:61)**

**'எனது உயிரை தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக, மர்யமின் மகன் (ஈஸா), உங்களிடம் நீதி செலுத்துபவராக, தீர்ப்பு வழங்குபவராக இறங்குவார். சிலுவையை முறிப்பார். பன்றியைக் கொல்வார். ஜிஸ்யா வரியை நீக்குவார். (தர்மம்) வாங்குவதற்கு எவருமே இல்லாத அளவுக்கு செல்வம் கொழிக்கும்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : அபூஹுரைரா (ரலி) நூல்கள் :புகாரி, முஸ்லிம்**

மறுமை நாள் வரும் முன், 'அது வர உள்ளது' என்பதை தெரிவிக்கும் அடையாளமாக ஈஸா நபி (அலை) அவர்களின் வருகையும் இருக்கும். ஈஸா நபி என்றால் யார்? நபி (ஸல்) அவர்களின் வருகைக்கு முன் வந்த ஈஸா நபியா? இரண்டாயிரம் வருடங்களுக்கு முன் வாழ்ந்த அவர் வருவாரா? இது சாத்தியமாகுமா? என்ற கேள்விகள் எழவே செய்யும்.

'ஈஸா (அலை) அவர்கள் மறுமைநாளின் அடையாளமாவார்' என்ற இறைவனின் அறிவிப்பை பலமுறை நாம் சிந்திக்கக் கடமைப்பட்டுள்ளோம். இந்த வாசகம், ஈஸா

நபியின் வருகைக்கு முன் வந்த 'தவ்ராத்' வேதத்தில் குறிப்பிடப்படவில்லை. அல்லது அவர்களுக்கே வழங்கப் பட்ட 'இன்ஜீல்' வேதத்தில் கூறப்பட வில்லை. நபி (ஸல்) அவர்களுக்கு வழங்கப்பட்ட குர்ஆனில் கூறப் பட்டுள்ளது. ஏற்கனவே அவர்கள் வந்து சென்றபின் இனியும் வருவார் என்றே குர்ஆன் கூறுகிறது. எனவே, ஏதோ ஒரு ஈஸா அல்ல முன்பு வந்த நபியான ஈஸாதான் மீண்டும் வருவார் என்பதே உண்மை. இதனால் தான் மறுமையின் அடையாளங்களில் ஒன்றாக ஈஸா நபியின் வருகையும் அமைந்துள்ளது.

அப்படியானால், ஈஸா இறக்கவே இல்லையா? என்ற சிந்தனை வரவே செய்யும். இந்த சிந்தனைக்கும் சந்தேகத் திற்கும் பின்வரும் வசனம் மூலம் அல்லாஹ் பதிலைத் தருகின்றான்.

**இன்னும் மர்யமின் மகனும், அல்லாஹ்வின் தூதருமான மஸீஹ் எனும் ஈஸாவை நாங்கள் கொன்று விட்டோம் என்று அவர்கள் கூறுவதாலும் சபிக்கப்பட்டனர். அவர்கள் அவரைக் கொல்லவும் இல்லை. அவரைச் சிலுவையில் அறையவுமில்லை. எனினும் அவர் (ஈஸா) அவர்களுக்கு குழப்பமாக்கப் பட்டார். நிச்சயமாக இதில் முரண்படுவோர் இதுபற்றிய சந்தேகத்திலேயே உள்ளனர். வெறும் யூகத்தைப் பின்பற்றுவதைத் தவிர (சரியான) அறிவு அவர்களிடம் இல்லை. நிச்சயமாக அவரை அவர்கள் கொல்லவே இல்லை. மாறாக, அல்லாஹ் அவரைத் தன்னளவில் உயர்த்திக் கொண்டான். அல்லாஹ் வல்லமை மிக்கவன். மிக ஞானமுடையவன் ஆவான்.**

**(அல்குர்ஆன் 4:157,158)**

'அவரை அவர்கள் கொல்லவில்லை' என அல்லாஹ் அறிவிப்பதின் மூலம் அவர்கள் கொல்லப்படவில்லை என்பதோடு 'உயிருடன் உள்ளார்' என்பதும் விளங்கும். 'உயிருடன் எங்கே உள்ளார்கள்?' என்ற கேள்வியும் வரக்கூடாது என்பதற்காக தன்னிடம் உயர்த்திக் கொண்

டான் என்றும் அல்லாஹ் கூறி விட்டான். அதாவது, ஈஸா நபி (அலை) அவர்கள் 'உயிருடன் வானில் உள்ளார்' என்பது மேற்கண்ட வசனம் மூலம் உறுதியாகிறது.

### ஈஸாவின் வருகையை மறுப்போர்

ஈஸா நபி (அலை) அவர்கள், மறுமையின் அடையாள மாக வருவார்கள் என்பதை மறுக்கும் சிலரும் உண்டு. குறிப்பாக தன்னை நபி என வாதிட்டு, 'அஹ்மதியா' எனும் மதத்தை உருவாக்கிய மிர்ஸாகுலாம் என்பவனும், அவனைப் பின்பற்றும் அவனது மதத்தவர்களும் ஈஸா நபி முன்பே இறந்துவிட்டார்கள் என்று கூறுவர் (இந்தக் கூட் டத்தினரை 'காதியானிகள்' என்று கூறப்படும். இவர்கள் தங்களை முஸ்லிம்கள் என்று கூறிக் கொள்வர். ஆனால், இவர்களுக்கும், இஸ்லாத்திற்கும் எந்த சம்பந்தமும் இல்லை என்பதை நினைவில் கொள்க)

இவர்கள் குர்ஆனில் உள்ள சில வசனங்களை வைத்தே, ஈஸா நபி இறந்து விட்டார்கள் என்ற வாதத்தை முன் வைக்கிறார்கள். ஈஸா நபியின் வருகையோடு, சம்பந்தப்பட்டதாக இவர்களின் வாதம் உள்ளதால் அவர்களுக்குரிய பதிலை அறிந்து கொள்வது அவசியமாகும்.

### வாதம் - 1

'அனைத்து ஆத்மாவும் மரணத்தை அனுபவித்தே ஆக வேண்டும்' என்று அல்லாஹ் குர்ஆனில் (3:185, 21:35, 29:57) கூறுகிறான். பிறப்பவர் இறந்தாக வேண்டும் எனும் போது, ஈஸாவிற்கு மட்டும் சலுகை இருக்க வாய்ப்பில்லை. அவர் இறந்து விட்டார் என்பதே உண்மை.

### விளக்கம்

எல்லா உயிரினமும் மரணிக்கத்தான் வேண்டும் என்ற

கருத்தில் நாம் மாற்றுக் கருத்து கொள்ளவில்லை. ஈஸா நபிக்கு மரணமே கிடையாது என்று நாம் கூறவே இல்லை. 'இனி அவர் இறப்பார்' என்றே கூறுகிறோம். தற்போது வானில் உள்ளார்கள். மீண்டும் உலகிற்கு வருவார்கள். வாழ்வார்கள். மரணிப்பார்கள் என்றே கூறுகிறோம். மற்றவர் போலில்லாமல் இவர்களுக்கு மரணம் தாமதமாக வருகிறது என்று கூறுகிறோம். எனவே, மேற்கண்ட வசனங்களின் அடிப்படையில் 'ஈஸா நபி மரணித்து விட்டார்கள்' என்று வாதம் வைக்க முடியாது.

## வாதம் - 2

'முஹம்மத் அல்லாஹ்வின் தூதரே தவிர வேறில்லை. அவருக்கு முன்னர் தூதர்கள் சென்று விட்டனர்' என்று அல்லாஹ் குர்ஆனில் (3:144) கூறுகின்றான். ஈஸா (அலை) அவர்கள் உட்பட எல்லா தூதர்களும் சென்று விட்டனர் என்பதையே இது காட்டுகின்றது.

மேலும் நபி (ஸல்) அவர்கள் மரணித்த போது, சில நபித்தோழர்கள் நம்ப மறுத்தனர். அவர்களிடம் அபூபக்ர் (ரலி) அவர்கள் இந்த வசனத்தையே ஓதிக் காட்டினார்கள். அதன் பிறகே 'நபி (ஸல்) அவர்களும் இறப்பவர்கள்தான். இப்போது இறந்துவிட்டார்கள்' என்று ஏற்றனர் என ஹதீஸ்கள் கூறுகின்றன.

எல்லா நபிமார்களும் மரணித்து விட்டனர் என்று இந்த வசனத்திற்குரிய விளக்கத்தை புரிந்திருந்ததால் தான் நபித்தோழர்கள், நபி (ஸல்) அவர்களின் மரணத்தை நம்பினர். ஈஸா நபி இன்னும் இறக்கவில்லை என அவர்கள் நம்பி இருந்தால், இந்த வசனமும் அவர்களுக்கு 'நபி (ஸல்) அவர்கள் இறக்கவில்லை' என்பதைப் போதித்து இருக்காது. ஈஸா உட்பட அனைத்து நபிமார்களும் இறந்து விட்டனர் என்று அவர்கள் நம்பியதால்தான், இந்த

வசனத்தை ஏற்று, நபி (ஸல்) அவர்களின் மரணத்தையும் ஒப்புக் கொண்டார்கள். எனவே, ஈஸா நபி மரணித்து விட்டார்கள் என்பதை இந்த வசனம், மற்றும் ஹதீஸ் மூலம் விளங்க முடிகிறது.

## விளக்கம்

ஈஸா (அலை) அவர்கள் இனி வர உள்ளார்கள் என்பதற்கான ஆதாரங்கள் இல்லையானால், இவர்களின் இந்த ஆதாரம் வலுவானதாகவே அமையும். ஆனால், ஈஸா (அலை) அவர்கள் வருவார்கள் எனும் ஆதாரத்தையும் கருத்தில் கொண்டு சிந்தித்தால், 'அவருக்கு முன் பல தூதர்கள் சென்று விட்டனர்' என்ற வசனத்திலிருந்து ஈஸா (அலை) அவர்கள் விதி விலக்குப் பெற்றுள்ளனர் என விளங்கலாம்.

இதுபோலவே ஈஸா (அலை) அவர்கள் உட்பட அனைவரும் இறந்து விட்டனர் என நம்பியதால் நபி (ஸல்) அவர்களின் மரணத்தை நபித்தோழர்கள் ஏற்றுக் கொண்டனர் என்ற வாதமும் சரியல்ல. ஈஸா (அலை) அவர்கள் வருவார்கள் என்பதை நம்பிய அவர்கள், உயிருடனும், உடலுடனும் உயர்த்தப்பட்டார்கள் என்றே நம்பினார்கள். 'உடல் இங்கே உள்ளது. உயிர் மட்டுமே உயர்த்தப்பட்டது' என அவர்கள் நம்பவில்லை. அப்படி அவர்கள் நம்பி இருந்தால், நபி (ஸல்) அவர்களின் அசைவற்ற உயிரற்ற உடலைக் கண்டபின், நபி (ஸல்) அவர்களின் மரணத்தை நம்பாமல் இருந்திருப்பார்களா? நபி (ஸல்) அவர்களின் உடலும் காணாமல் போயிருந்தால், ஈஸா நபி போல் நபி (ஸல்) அவர்களும் உயர்த்தப் பட்டு உயிருடன் உள்ளார்கள் என்று எண்ணலாம். ஆனால், அப்படி ஒரு சூழலே இல்லாத போது நபி (ஸல்) அவர்களின் மரணத்தோடு ஈஸா நபியின்

மரணம் பற்றி இணைத்து சிந்திக்க வேண்டியதில்லை.

## வாதம் - 3

'ஈஸா நபி இன்றும் உயிருடன் உள்ளார். நபி (ஸல்) அவர்கள் உயிருடன் இல்லை. இதிலிருந்தே உங்கள் நபியை விட எங்களின் ஈஸா சிறந்தவர் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள்' என, கிருத்துவர்கள் நம்மிடம் பெருமை பேசக் காரணமாக அமையாமல் இருக்க, ஈஸா இறந்து விட்டார் என்று கூறத்தான் வேண்டும்.

## விளக்கம்

நபிமார்களில் சிலருக்கு சிலரை விட சில சிறப்புக்களை அல்லாஹ் வழங்கி உள்ளான். இதற்காக நபிமார்களில் சிலரை விட சிலரை நாம் குறைத்து மதிப்பிட வேண்டிய தில்லை. இதே ஈஸா நபியை எடுத்துக் கொள்ளுங்கள். தந்தை இன்றிப் பிறந்தார். நபி (ஸல்) அவர்கள் தந்தையின் விந்து மூலம் பிறந்தார்கள். இதை வைத்துக் கூட 'எங்கள் நபியின் பிறப்பே அற்புதம்' என கிருத்து வர்கள் வாதாட லாம். இதற்காக 'ஈஸா நபியும் தந்தையின் விந்து மூலமே பிறந்தார்' என்று கூறமுடியுமா?

ஈஸா நபி (அலை) அவர்களை விட எத்தனையோ பல சிறப்புக்களை அல்லாஹ், முஹம்மத் நபி (ஸல்) அவர் களுக்கு வழங்கி உள்ளான். பொதுமக்கள் அனைவருக்கும் பொதுவான நபி. இறுதி நபி, மறுமை வரை உள்ள மக்கள் அனைவரும் பின்பற்ற பட வேண்டிய நபி. ஏன் ஈஸா (அலை) அவர்கள் இனிவரும் போது கூட முஹம்மத் நபி (ஸல்) அவர்களையே பின்பற்றுவார் என்பன போன்ற சிறப்புக்களைக் கூறலாம்.

கிருத்துவர்களின் முட்டாள்தனமான வாதத்திற்கு அறிவுப் பூர்வமான பதில்கள் ஏராளம் உண்டு. ஆனால், அவர் களின் முட்டாள்தனமான வாதத்திற்காக நாம் சத்தியக் கருத்தை மாற்றிக் கொள்ள முடியுமா?

**வாதம் – 4**

**நான் உயிருடன் இருக்கும் காலமெல்லாம் தொழுமாறும், ஜகாத் கொடுக்குமாறும் அல்லாஹ் எனக்கு போதித்துள்ளான்.**

**(அல்குர்ஆன் 19:31)**

இந்த வசனத்தில் உள்ள ஈஸா (அலை)அவர்களின் வாக்கு மூலப்படி 'அவர்கள் உயிருடன் இருந்தால் தொழுதாக வேண்டும். ஜகாத் கொடுக்க வேண்டும்' என்று புரிய முடிகிறது. இந்த வகையில் இப்போது அவர்கள் உயிருடன் உள்ளார்கள் என்றால், அவர்கள் தொழுகிறார்களா? தொழுவது என்றால், தொழுகையின் நேரம் பற்றி எப்படி அறிவார்? எத்தனை நேரம் தொழ வேண்டும்? இதுபோல் ஜகாத் கொடுத்தாக வேண்டும் என்றால், ஜகாத்தின் கடமையை ஏற்படுத்தும் அளவுக்குரிய பொருளாதாரம் எப்படிக் கிடைக்கும்? அப்படியே கிடைத்தாலும் ஜகாத் வாங்கிட மக்கள் தேவைதானே! மக்கள் இல்லாமல் ஜகாத்தை எப்படி வழங்குவார்? இப்படிச் சிந்தித்தால் ஈஸா உயிருடன் இல்லை என்பதே சரி!

**விளக்கம்**

இவர்கள் கூறும் ஆதாரம் உண்மை போல் தெரிந்தாலும் உண்மையில் இந்த வசனத்தின் முன்-பின் வார்த்தைகளையும் இணைத்துப் பார்த்தால் இந்த வாதத்தில் ஒரு உண்மையும் இல்லை என்பது புரியும்.

وَّجَعَلَنِىْ مُبٰرَكًا اَيْنَ مَا كُنْتُ ۖ وَاَوْصٰنِىْ بِالصَّلٰوةِ وَالزَّكٰوةِ مَا دُمْتُ حَيًّا ۖ ﴿٣١﴾

وَّبَرًّۢا بِوَالِدَتِىْ وَلَمْ يَجْعَلْنِىْ جَبَّارًا شَقِيًّا ﴿٣٢﴾

19 வது அத்தியாயத்தின் 31 வது வசனத்திற்கு மட்டுமே அவர்கள் பொருள் கொண்டு இந்த வாதத்தை முன்வைக்கிறார்கள். இதில் 32வது வசனத்தை இணைத்துத் தான் பொருள் கொள்ள வேண்டும். அப்படி இணைத்து வைத்து பொருள் கொண்டால் இவர்களின் வாதம் அடிப்பட்டுப் போய்விடும்.

இங்கே 32வது வசனத்தில் உள்ள 'வபர்ரன் وَبَرًّا' என்ற வார்த்தையை 'பிஸ்ஸலாத்தி بِالصَّلٰوةِ' என்ற வார்த்தையுடன் இணைத்து பொருள் கொள்கின்றனர் குர்ஆன் விரிவுரையாளர்கள் தமிழில் மொழி பெயர்த்தோரும் இப்படித்தான் செய்துள்ளனர்.

அதாவது கீழ் கண்டவாறு பொருள் கூறுகின்றனர்.

**'இன்னும் நான் எங்கிருந்தாலும் அவன் என்னை நற்பாக்கியமுடையவனாக ஆக்கியிருக்கின்றான். மேலும் நான் உயிருடன் இருக்கும் காலமெல்லாம் தொழுகையையும், ஜகாத்தையும் நிறைவேற்ற எனக்குக் கட்டளையிட்டுள்ளான். என் தாயாருக்கு நன்றி செய்பவனாக (எனக்குக் கட்டளையிட்டுள்ளான்) நற்பேறு கெட்ட, பெருமைக் காரனாக என்னை அவன் ஆக்கவில்லை.**

**(அல்குர்ஆன் 19:31,32)**

'தாயாருக்கு நன்றி செய்தல்' என்று வரும் بَرًّا என்ற வார்த்தையை தொழும்படி என்று வரும் بِالصَّلٰوةِ என்ற வார்த்தையில் சேர்த்து பொருள் கொண்டு,

'தொழும் படியும் ஏவியுள்ளான். பெற்றோருக்கு நன்றி செய்யும்படியும் ஏவியுள்ளான் என்று பொருள் கொள்கின்றனர்.

இது சரி அல்ல, இந்த بَرًّا என்ற வார்த்தையை مُبٰرَكًا என்ற வார்த்தையுடன் சேர்த்துத் தான் பொருள் கொள்ள

வேண்டும் அது தான் சரியான முறையும் கூட அரபி இலக்கணம் தெரிந்தோர் இந்த உண்மையை உணரலாம். இப்படி பொருள் கொண்டால் மேற் கண்ட வாதம் அடிபட்டுப் போய் விடும்.

**இதன் படி கீழ் கண்டவாறே பொருள் வேண்டும். 'இன்னும் நான் எங்கிருந்தாலும் அவன் என்னை நற்பாக்கிய முடையவனாக ஆக்கி உள்ளான். மேலும் நான் உயிரு டன் இருக்கும் காலமெல்லாம் தொழுகைகையும், ஜகாத்தையும் (நிறைவேற்ற) எனக்குக் கட்டளையிட்டுள்ளான்.**

**என் தாயாருக்கு நன்றி (பணிவிடை) செய்யும் காலமெல்லாம் தொழுகை, ஜகாத்தை நிறைவேற்ற கட்டளையிடப்பட்டுள்ளான்) நற்பேறு கெட்ட, பெருமைக் காரனாக என்னை அவன் ஆக்கவில்லை. (அல்குர்ஆன் 19:31,32)**

'நன்றி செய்தல் என்ற வார்த்தையை 'உயிருடன் இருத்தல்' என்ற வார்த்தையுடன் சேர்த்துத் தான் மொழி பெயர்ப்பு செய்திருக்க வேண்டும். ஏனோ இதில் அறிஞர் களில் பலர் சறுக்கி விட்டனர்.

இப்போது இப்படி பொருள் கொண்ட படி பார்த்தால் அல்லாஹ் தொழும் படியும், ஜகாத் கொடுக்கும் படியும் கட்டளையிட்டுள்ளதற்கு இரண்டு நிபந்தனைகளுக்குட் பட்டுத்தான்.

(1) உயிருடன் இருக்கவும் வேண்டும்.

(2) தாயாருக்கு பணிவிடையும் செய்ய வேண்டும். இந்த இரண்டு நிபந்தனைகளும் ஒரு சேர இருக்கும் போது தான் தொழுவதும், ஜகாத் கொடுப்பதும் கடமை.

ஈஸா (அலை) அவர்கள் உயிருடன் உள்ளார்கள் தான். ஆனால் அவர்களின் தாயாருக்கு பணிவிடை செய்ய

அவர்களின் தாயார் உயிருடன் இல்லையே!

இரண்டு நிபந்தனைகளில் ஒன்று இல்லாமல் போகும் போது தொழுவதும், ஜகாத் கொடுப்பதும் கடமை இல்லாமல் போய் விடுகிறது.

இந்த வகையில் தான், ஈஸா(அலை) அவர்கள் தொழு தாக வேண்டும் ஜகாத் கொடுத்தாக வேண்டும். எப்படித் தொழுகிறார்? எப்படி ஜகாத் கொடுக்கிறார்? என்ற கேள்விக்கே இடமில்லாமல் போய் விடுகிறது.

بَرًّا என்ற வார்த்தையையும், حَيًّا என்ற வார்த்தையையும் இணைத்து வாசிப்பதை இவர்கள் ஏற்க மறுத்து விட்டா லும் கூட இவர்களின் வாதம் மற்றொரு கோணத்திலும் அடிப்பட்டுப் போய் விடுகிறது.

எந்த ஒரு காரியத்தை செய்வதாயினும் அக்காரியம் நிறைவேற்றப் பட சூழலும் சரியாக இருக்க வேண்டும். இதன் படி பூமியில் உள்ளவருக்குத் தான் தொழுகை கடமை. வசதி உள்ளவருக்குத் தான் ஜகாத் கடமை.

கடமையும் கூட காரணங்களுடன் நிறைவேற்றப்பட வேண்டும் என்றாகும் போதும் பூமியில் இல்லாத தற்போது வசதியும் இல்லாத நிலையில் உள்ள ஈஸா(அலை) அவர்கள் மீது தொழுகையும், ஜகாத்தும் கடமையாகாது என்பதைப் புரியலாம்

எனவே தவறான கேள்விகளை எழுப்பி ஈஸா (அலை) அவர்கள் இறந்து விட்டார்கள் என்று கூற முடியாது.

## எப்போது வருவார்கள்?

**டமாஸ்கஸ் நகரின் கிழக்குப் பகுதியில் உள்ள வெள்ளை மனாரா (கோபுரம்) வுக்கு அருகில் அவர் இறங்குவார். இரண்டு வானவர்களின் சிறகுகள் மீது தன் கைகளை வைத்தவராக**

**இறங்குவார். அவர் தலை குனிந்தால் தலையில் நீர் கொட்டும். தலையை உயர்த்தினால் முத்துப்போல் தண்ணீர் சிதறும். அவரது மூச்சுக் காற்று படும் எந்த இறை மறுப்பாளரும் இறந்தே போவார். பின்னர் தஜ்ஜாலைத் தேடுவார்கள். 'லுத்' எனும் ஊர்வாசலில் அவனைப் பிடித்துக் கொல் வார்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் : நவ்வாஸ் இப்னு ஸம்ஆன் (ரலி) நூல்:திர்மிதீ**

தஜ்ஜால் வந்து, பூமியில் பெரும் குழப்பம் விளைவிக்கும் காலக்கட்டத்தில் ஈஸா நபி (அலை) இறங்கி வந்து, அவனைத் தேடிக் கொல்வார்கள். தஜ்ஜாலின் வருகையை வைத்தே ஈஸா (அலை) அவர்களின் வருகையும் இருக்கும்.

## (6) யஹ்ஜுஜ், மஹ்ஜுஜ் வருகை

**'இறுதியில் யஹ்ஜுஜ், மஹ்ஜுஜ் கூட்டத்தினர் திறந்து விடப்படுவார்கள், உடனே அவர்கள் (வெள்ளம் போல்) ஒவ்வொரு மேட்டிலிருந்தும் விரைந்து வருவார்கள்'.**

**(அல்குர்ஆன் 21:96)**

மறுமை நாளின் அடையாளமாக யஹ்ஜுஜ் எனும் கூட்டத் தினரும், மஹ்ஜுஜ் என்ற கூட்டத்தினரும் வருவார்கள் என்பதும் ஒன்றாகும்.

இந்த வசனத்தில் 'அவர்கள் திறந்து விடப்படுவார்கள்' என்று உள்ளது. இதிலிருந்து அவர்கள் அடைத்து வைக்கப்பட்டுள்ளனர் என்பது தெரியவருகிறது.

மேலும், அவர்கள் இனி படைக்கப்பட்டு வருபவர்கள் இல்லை. ஏற்கனவே உள்ள படைப்பினம் தான் என்பதையும் புரிய முடிகிறது.

'அவர்கள் மேடான பகுதியிலிருந்து விரைந்து வருவார்கள்' என்ற வாசகத்தின் மூலம் அவர்கள் மலைப் பகுதிகளில் அடைத்து வைக்கப்பட்டுள்ளனர் என்பதையும் விளங்க முடிகிறது.

## இரும்பு சுவருக்குப் பின்னே . . .!

(துல்கர்னைன் எனும் மன்னர்) இரண்டு மலைகளுக்கும் முன்னே ஒரு கூட்டத்தினரைக் கண்டார்கள். இவர்கள் பேசுவதை அவர்கள் விளங்கிக் கொள்பவர்களாக இல்லை. துல்கர்னைன் அவர்களே! யஃஜூஜ் மற்றும் மஃஜூஜ் கூட்டத்தினர் இந்த பூமியில் குழப்பம் விளைவித்து வருகின்றனர். எனவே, எங்களுக்கும் அவர்களுக்குமிடையே நீங்கள் தடுப்பு(ச் சுவர்) ஏற்படுத் துவதற்காக உங்களுக்கு நாங்கள் வரி செலுத்தட்டுமா? என்று கேட்டனர்.

'என் இறைவன் எனக்களித்துள்ள வசதி எனக்குச் சிறந்ததாகும். எனவே, (உடல்) உழைப்பைக் கொண்டு எனக்கு உதவுங்கள். அவர்களுக்கும் உங்களுக்குமிடையே ஒரு தடுப்பை நான் ஏற்படுத்துகிறேன்' என்று துல்கர்னைன் கூறினார்.

'என்னிடம் இரும்புப் பாளங்களைக் கொண்டு வாருங்கள்' (என்றும் கூறினார், இரு மலைகளுக்கிடையே (உள்ள இடைவெளி) மட்டமானதும் 'ஊதுங்கள்' என்றார். அது நெருப்பாக ஆனதும் (செம்பை) என்னிடம் கொண்டு வாருங்கள். இதன்மீது அதை நான் ஊற்றுகிறேன் என்று கூறினார்.

இதில் ஏறவும் அவர்கள் சக்தி பெற மாட்டார்கள். அதில் துவாரமிடவும் சக்தி பெற மாட்டார்கள்.

இது என் இறைவனின் அருட் கொடையாகும். (எனினும்) என் இறைவனின் வாக்கு வரும்போது அதை அவன் தூளாக்குவான். என் இறைவனின் வாக்கு, உண்மையானதாகும்' என்றும் அவர் கூறினார்.

**அந்நாளில், அவர்களில் சிலரை மற்றும் சிலருடன் அலை மோத விடுவோம். மேலும் 'சூர்' ஊதப்பட்டதும் அவர்களை ஒன்று திரட்டுவோம்.** (அல்குர்ஆன் 18:94–99)

மலைப்பகுதியில் வாழ்ந்த யஃஜூஜ் - மஃஜூஜ் கூட்டத்தினர் அந்தப் பகுதியில் வாழ்ந்த மக்களுக்கு பெரும் துன்பங்களை அளித்து வந்துள்ளனர். இதைக் கண்டு செய்வதறியாது நின்ற மக்கள், அப்போது உலகின் அனைத்துப் பகுதியையும் ஆட்சி செய்த மன்னர் துல்கர் னைன் அவர்களிடம் முறையிட்டனர், அவர் இரும்பைக் காய்ச்சி, அதன்மீது செம்பை ஊற்றியதும், கெட்டியான சுவராக ஆகிவிட்டது. கெட்டியான அந்த இரும்புச் சுவருக் குப் பின்புறம் தான் யஃஜூஜ் - மஃஜூஜ் கூட்டம் உள்ளது என்பது தெரிய வருகிறது. திறந்து விடப்பட்டால் ஒருவர் மீது ஒருவர் மோதிக் கொண்டு அலைகள் போல் வருவார் கள் என்பதிலிருந்து அவர்கள் எண்ணிலடங்கா கூட்டம் என்பதும் புரிய வருகிறது.

இவ்வாறு அவர்கள் அடைத்து வைக்கப்பட்ட பகுதி எங்குள்ளது என்ற விபரம் குர்ஆனிலோ, ஹதீஸிலோ கூறப்படவில்லை.

## தெரியாமல் இருப்பது ஏன்?

நவீனக் கருவிகள் கண்டு பிடிக்கப்பட்டு அது நடைமுறை யில் உள்ள காலம் இது. ஆகாய விமானங்களும், ராடர் கருவிகளும், தொலை நோக்குக் கருவிகளும் என, அதி நவீனக் கருவிகள் உள்ள இந்தக் காலத்தில், யஃஜூஜ் - மஃஜூஜ் கூட்டத்தினர் வாழும் மலைப் பகுதியைக் கண்டு பிடிக்கப்படாமல் இருக்க முடியுமா? செம்பை உருக்கி ஊற்றப்பட்டு இரும்புச் சுவர் அமைத்திருக்கும் போது அதன் பளபளப்பைக் கண்டே அவர்களின் இருப்பிடம் அறியலாம் தானே' என்ற கேள்விகள் நமக்குள் எழலாம்.

இது ஒன்றும் ஆச்சரியமான விஷயமில்லை. மனி

தனிடம் நவீனச் சாதனங்கள் இருக்கிறது என்பது உண்மை தான். ஆனால் அதனை முழுமையாக பயன்படுத்திக் கொள்ளவில்லை என்பது அதைவிட உண்மையானதாகும்.

பூமிக்கு அப்பாற்பட்டு நின்று பூமியைப் படம் பிடித்து இருக்கிறார்கள். பூமியின் பரப்பளவைத்தான் கண்டு பிடித்துள்ளார்களே தவிர, பூமியை அங்குலம் அங்குலமாக ஆராய்ந்து பார்க்கும் அளவுக்கு கருவிகள் பயன்பட வில்லை. சிலபகுதிகள் இப்போது தான் கண்டு பிடிக்கப் பட்டு வருகிறது என்றுதான் விஞ்ஞானிகள் கூறுகின்றனர். இந்த மண்ணில் இன்றும் மனிதக்கால்களோ, பார்வையோ படியாத இடங்கள் ஏராளமாக உள்ளன.

சக்தி வாய்ந்த கருவிகள் மூலம் பூமி முழுதும் ஆராயப் பட்டாலும் கூட, காடுகளை மேலோட்டமாகத்தான் பார்க்கலாமே தவிர, துல்லியமாக காணமுடியாது. மரமும் செடிகளும் நிறைந்திருப்பதே இதற்குக் காரணமாகும். இதனால் தான் 'சந்தன மரக்கடத்தல் பேர் வழி எனக்கூறப் படும் வீரப்பன் குறிப்பிட்ட காட்டில்தான் உள்ளான்' எனத் தெரிந்தும் பல காலமாக கைது செய்ய இயலவில்லை. காடுகளில் மரங்கள், குகைகள் போன்றவை காரணமாக தொலை நோக்குக் கருவிகளுக்குள் உள்ளே விழுவதே இல்லை.

மலைகளால் சூழப்பட்ட காடுகளிலோ, குகைகளிலோ யஃஜூஜ் மற்றும் மஃஜூஜ் கூட்டத்தினர் இருந்தால் எந்த கருவிகள் மூலமும் அவர்களைக் காண முடியாது. செம்பு எனும் உலோகம் பாசிபடிந்து பச்சை நிறத்தில் இருக்கும். இதனால் அதன் பளபளப்பை கண்டுபிடிக்க முடியாமல் அதை அருகில் இருந்து பார்த்தாலும், தூரத்தில் இருந்து பார்த்தாலும் மலைமேல் புல் வளர்ந்துள்ளது போல் பசுமையாகவே தெரியும்.

எனவே, எவரது கண்களுக்கும் புலப்படாத பகுதியில்

அந்தக் கூட்டத்தினர் வாழ்கின்றனர். இனி வருங்காலத்தில் மனிதர்கள் அவர்கள் வாழும் பகுதியை அடைய நேரிடலாம். அந்த நேரமும், மறுமை நாளின் அடையாளமாக அவர்கள் வெளியேறும் காலமாகவும் இருக்கலாம். எல்லாவற்றையும்விட மறுமையின் அடையாளமாக அவர்களின் வருகை இருக்கும் என்பதாலேயே அல்லாஹ் மனிதர்களின் பார்வையை விட்டு மறைத்து வைத்திருக்கலாம்.

## யஹ்ஜுஜ் - மஹ்ஜுஜ் மனித இனமே!

அவர்கள் மனித இனத்தை விட்டும் அப்புறப்படுத்தி, மறைக்கப்பட்டிப்பதால் அவர்களை ஏதோ ஒரு புது இனம் என்று விளங்கிடக் கூடாது. அவர்களும் மனித இனமே!

**யஹ்ஜுஜ் மஹ்ஜுஜ் கூட்டத்தினர் ஆதம் (அலை) அவர்களின் சந்ததிகளாவர். அவர்கள் விடுவிக்கப்பட்டால் மக்களின் வாழ்க்கையைப் பாழாக்குவார்கள். அவர்களில் ஒவ்வொருவரும் ஆயிரம் அல்லது அதற்கும் மேலான வாரிசுகளை உருவாக் காமல் மரணிப்பதில்லை என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் :அப்துல்லாஹ் இப்னு அம்ரு (ரலி) நூல் :தப்ரானி**

## அவர்களின் உருவம்

**'யஹ்ஜுஜ் மற்றும் மஹ்ஜுஜ் கூட்டத்தினர் வரும் வரை நீங்கள் போராடிக் கொண்டே இருப்பீர்கள். அவர்களின் முகங்கள் அகன்றதாகவும், கேடய(ம் போல் வட்ட)மாகவும், கண்கள் சிறியதாகவும், முடிகள் செம்பட்டையாகவும் அமைந்-திருக்கும்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

அறிவிப்பாளர் :காலித் இப்னு அப்துல்லாஹ் (ரலி) நூல்கள் :அஹ்மத், தப்ரானி

18:99 வது வசனத்தில் உள்ள 'அவர்களில் சிலரை மற்றும் சிலருடன் அலை மோத விடுவோம்' என்ற வாசகப்படி நெருக்கடி ஏற்படும் அளவுக்கு கூட்டமாக இருப்பர் என்பது புரிந்தாலும், அவர்கள் உயரம் குறைந்தவர்களாக இருப்

பார்கள் என்பதும் புரிகிறது.

இதேபோல் புகாரீ ஹதீஸ் (எண் 3348) ‘நரகத்தில் நாம் ஒருவர் என்றால் 1000 பேர் யஹ்ஜூஜ் -மஹ்ஜூஜ் கூட்டத் தார் இருப்பார்கள்’ என்று கூறுகிறது. இந்த வாசகம் மூலமும் அவர்களின் எண்ணிக்கை கூடுதலானது, அதே வேளையில் உயரமும் குறைவானது என்பதைப் புரியலாம்.

இது போல் ஒரு நபர் ஆயிரம் குழந்தைகளை வாரிசாகப் பெறுவார்’ என்ற வாசகம் மூலம், அவர்களின் பிறப்பின் போதே உயரம் மிகச் சிறியதாக இருக்கும் என்றும் புரியலாம். இவர்களின் உயரம் ஒருசாண், அல்லது இருசாண் அளவுக்கே இருக்கும். இவர்களில் மிகவும் உயரமானவர் மூன்று சாண் அளவுக்கு இருப்பார்’ என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாக ஹாகிம் நூலில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

மேலும், 21:96 வது வசனத்தில் உள்ள ‘விரைந்து வருவார்கள்’ என்ற வாசகம் மூலம், அவர்கள் அதிவேகமாக இயங்குவார்கள் என்பதும் விளங்குகிறது.

## ஈஸா நபியின் பிரார்த்தனையால் அழிவர்!

**‘யஹ்ஜூஜ்-மஹ்ஜூஜ் கூட்டத்தினரை அல்லாஹ் வெளிப் படுத்துவான். அவர்கள் முதல் கூட்டத்தினர் ஒரு நீரோடையைக் கண்டு அதன் நீரைப் பருகுவார்கள். அடுத்த கூட்டத்தினர் வரும் போது (தண்ணீர் இல்லாமல் இருப்பதைக் கண்டு)’ அந்த இடத்தில் ஒரு காலத்தில் தண்ணீர் இருந்தது’ என்று கூறுவார்கள். பின்னர் பைத்துல் முகத்தஸ் பகுதியில் உள்ள ஒரு மலையை அடைவார்கள்.**

**‘பூமியில் உள்ளவர்களைக் கொன்று விட்டோம். வாருங்கள்! வானில் உள்ளவர்களைக் கொல்வோம்’ என்று கூறுவார்கள். தங்கள் அம்புகளை வானை நோக்கி எய்துவார்கள். அவர்களின் அம்புகளில் இரத்தம் பூசி**

அல்லாஹ் திருப்பி அனுப்புவான். பிறகு அவர்கள் ஈஸா நபியையும், அவரின் தோழர்களையும் முற்றுகையிடுவார்கள்.

பின்னர், ஈஸா நபியும், அவர்களின் தோழர்களும், அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்வார்கள். அல்லாஹ் புழுக்களை அவர்களிடம் அனுப்புவான். அந்தப் புழுக்களின் தாக்குதல் காரணமாக, அனைவரும் ஒரேயடியாக செத்து விடுவார்கள். பின்னர், ஈஸா நபி அவர்களும் அவர்களின் தோழர்களும் (மலையி லிருந்து) தரைக்கு வருவார்கள். யஹ்ஜூஜ் மஹ்ஜூஜ் கூட்டத்தாரின் (பிணங்களின்) நாற்றமும், நெருக்கடியும் ஒரு சாண் அளவு இடத்தைக் கூட விடாது பரவி நிற்கும். பின்னர் ஈஸா நபி அவர்களும், அவர்களின் தோழர்களும் அல்லாஹ்விடம் துஆச் செய்வார்கள். உடனே அல்லாஹ் ஒட்டகங்களின் கழுத்துக்கள் போன்ற வடிவில் சில பறவைகளை அனுப்புவான். அப்பறவைகள் பிணங்களை சுமந்து சென்று அல்லாஹ் நாடிய இடங்களில் போட்டுவிடும்' என்று நபி (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பாளர் : நவ்வாஸ் இப்னு ஸம்ஆன் (ரலி) நூல் :முஸ்லிம்

கடும் அமளி - துமளியில் ஈடுபடும் யஹ்ஜூஜ் - மஹ்ஜூஜ் கூட்டம், இறுதியில் ஈஸா நபியிடமும் போருக்கு நிற்பார்கள். அவர்களை முற்றுகையிடும் வேளையில் அவர்களின் பிரார்த்தனை காரணமாக அழிவார்கள். இந்தக் கூட்டத்தினர் வெளியேறிய நாட்களில் கடும் பஞ்சமும் ஏற்படும் என்பதையும் இந்த ஹதீஸில் புரிய முடிகிறது.

## யஹ்ஜூஜ்-மஹ்ஜூஜ்களின் அழிவுக்குப் பின் . . .

(யஹ்ஜூஜ் - மஹ்ஜூஜ் கூட்டத்தினர் அழிவுக்குப் பின்) அவர்கள் (பயன்படுத்திய) அம்புகள், வில், அம்பாரத் தூளிகள் போன்றவற்றை முஸ்லிம்கள் ஏழு ஆண்டுகளுக்கு விறகாகப் பயன்படுத்துவார்கள். பின்னர் அல்லாஹ் மழையை அனுப்புவான். அனைத்து வீடுகளையும் பூமியையும் அந்த மழை கண்ணாடி

**போல் கழுவிவிடும். பின்னர் பூமியை நோக்கி, 'உன் கனிகளை 'முளைக்கச் செய்! உன்னிடமிருந்த பரக்கத் தையும் திரும்பக் கொடு' என்று கூறப்படும். (நல்ல விளைச்சல் ஏற்படும்) அந்நாளில் ஒரு மாதுளம் பழத்தை ஒரு கூட்டமே உண்பார்கள். அதன் தொலி மூலம் (குடைபோல் அமைத்து) நிழல் பெறுவார்கள். (அந்த அளவுக்கு அது பெரியதாக இருக்கும்). பாலிலும் பரக்கத் செய்யப்படும். ஒரு ஒட்டகத்தில் கறக்கப்படும் பால், ஒரு பெரிய கூட்டத்தாருக்குப் போதுமானதாக இருக்கும். ஒரு மாட்டில் ஒரு முறை கறக்கப்படும் பால் ஒரு சமூக மக்களுக்குப் போதுமானதாக இருக்கும். ஓர் ஆட்டில் ஒரு முறை கறக்கும் பால் ஒரு குடும்பத்துக்குப் போதுமானதாக இருக்கும். மக்களின் இந்த வளமான வாழ்க்கையின் போது, அல்லாஹ் ஒரு சுகமானக் காற்றை அனுப்புவான். அக்காற்று அக்குள் வரை செல்லும். மூமின்கள், முஸ்லிம்கள் அனைவரின் உயிர்களும் கைப்பற்றப்படும். கழுதைகள் வெருண் டோடுவது போல் வெருண்டோடுவர். கெட்ட மக்கள் மட்டுமே எஞ்சி நிற்பர். அவர்கள் இருக்கும் போது தான் மறுமை நாள் நிகழும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

அறிவிப்பாளர் :நவ்வாஸ் இப்னு ஸம்ஆன் (ரலி) நூல் :திர்மிதீ

இந்த ஹதீஸ் மூலம், யஃஜூஜ்-மஃஜூஜ் கூட்டத்தாரின் மறைவுக்குப் பின், மக்களிடையே செல்வம் பெருகி, வளமான வாழ்வு ஏற்படும் என்பதைப் புரிய முடிகிறது. வளமான வாழ்க்கையை அனுபவிக்கும் காலத்தில் முஸ்லிம்களின் உயிர்கள் மட்டும் கைப்பற்றப்பட்டுவிடும் என்பதும், அதன்பின்னர் இறை மறுப்பாளர்களும் தீய நடத்தை உள்ளவர்களும் வாழும் போதே உலகம் அழியும் என்பதும் தெரிகிறது. தஜ்ஜால் வருகை, ஈஸா நபி வருகை, யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டம் வருகை என இம்மூன்றும் அடுத்தடுத்து நடைபெறும் என்பதும் நமக்குத் தெரிகிறது.

 

## 7. கிழக்கே ஒரு பூகம்பம்

## 8. மேற்கே ஒரு பூகம்பம்

## 9. அரபு நாட்டில் ஒரு பூகம்பம் என மூன்று பூகம்பங்கள்

**'(மதீனாவின்) கிழக்கே ஒரு பூகம்பம், மேற்கே ஒரு பூகம்பம், அரபு தீபகற்பத்தில் ஒரு பூகம்பம் என மூன்று பூகம்பங்கள் - நில நடுக்கம் ஏற்படும். அதை நீங்கள் காணும் வரை மறுமை நாள் நிகழாது' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

அறிவிப்பாளர் :ஹுதைபா (ரலி) நூல் : முஸ்லிம்

பூகம்பங்கள் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டே தான் இருக்கின்றன. இதுவும் மறுமை நாளின் அடையாளங்களில் ஒன்று. நாம் முன்னரே கண்டோம். இங்கே குறிப்பிடப்படும் பூகம்பங்கள் மூன்றும் பெரிய அளவில் இருக்கும் என்பதையே நமக்கு விளக்குகிறது.

மூன்று பூகம்ப நிகழ்வுகளையும் மூன்று அடையாளங்களாக நபி (ஸல்) அவர்கள் கூறுவதால், ஒரே நேரத்தில் இந்த மூன்று பூகம்பங்களும் நிகழாது என்பதையும், அடுத்தடுத்து இந்த பூகம்பங்கள் ஏற்படும் என்பதையும் நாம் விளங்கலாம்.

## 10. பெரும் நெருப்பு

மறுமை நாளின் அடையாளமாக மக்களை நாலா திசை-களிலிருந்தும் ஒன்று திரட்டும் வகையில் உள்ள பெரும் நெருப்பும் ஒன்றாகும்.

**'ஹிஜாஸ் பகுதியிலிருந்து ஒரு நெருப்பு கிளம்பி, ஷாம் நாட்டின் புஸ்ரா (ஹவ்ரான்) எனும் ஊரிலுள்ள ஒட்டகங்களின் பிடரிகளைப் பிரகாசிக்கச் செய்யாத வரை மறுமை நாள் நிகழாது' என்று நபி (ஸல்) கூறினார்கள்.**

அறிவிப்பாளர் :அபூஹுரைரா (ரலி) நூல் :(புகாரி 7118)

இந்த ஹதீஸில் கூறப்படும் தீவிபத்து என்பது வேறு பெரும்

அடையாளங்களில் ஒன்றாகக் கூறப்படும் 'பெரும் நெருப்பு' என்பது வேறு.

'இந்த நெருப்பு ஹிஜ்ரீ 654ல் நடந்து முடிந்து விட்டது. ஹிஜாஸ் பகுதியில் இந்த தீவிபத்து ஏற்படும் முன் பூகம்பம் ஒன்று ஏற்பட்டது. இந்த பூகம்பத்திற்குப் பின் 'அல்ஹர் ராப் பகுதியில் பெரும் தீ விபத்து ஏற்பட்டது. எரிமலை ஒன்றும் வெடித்தது. இந்த நெருப்பு, புஸ்ரா நகரின்எல்லை வரைத்தெரிந்தது' என்று வரலாற்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

**'எமனிலிருந்து நெருப்புத் தோன்றி; மக்களை அவர்களின் மஹ்ஷரின் பால் விரட்டிச் செல்லும். அது நிகழும் வரை மறுமை நாள் நிகழாது' என்று நபி (ஸல்) கூறினார்கள்.**

**அறிவிப்பாளர் :ஹுதைபா (ரலி) நூல் : முஸ்லிம்**

எமனில் தோன்றும் இந்த நெருப்பு மக்களை நாலா திசைகளிலும் சூழ்ந்து கொள்ளும். இந்த நெருப்பின் வளையத்திற்குள் மக்கள்சிக்கிக் கொள்வர். மக்கள் ஓய்வெடுக்க எண்ணும் போது; அந்த தீயும் ஓய்வெடுக்கும், உண்ணும் வரைக் காத்திருக்கும். பிறகு துரத்தும்.

'(மறுமை நாள் ஏற்படுவதற்கும் சற்று முன் கிழக்கிலிருந்து மேற்கு நோக்கி) மக்கள் மூன்று பிரிவினராக ஒன்று திரட்டப்படுவார்கள். (அதில் முதல் பிரிவினர்) அச்சத்துடனும், ஆர்வத்துடனும் செல்வார்கள். (இரண்டா வதுப் பிரிவினர்) ஒரே ஒட்டகத்தில் இரண்டு பேராக, ஒரே ஒட்டகத்தில் மூன்று நபர்களாக, ஒரு ஒட்டகத்தில் நான்கு நபர்களாக, ஒரே ஒட்டகத்தில் பத்து நபர்களாகச் செல்வார்கள்.

**அவர்களில் மீதமான (மூன்றாம் பிரிவி)னர்களை (பூமியில் ஏற்படும் பெரும்) தீ நெருப்பு ஒன்று திரட்டும். அவர்கள் மதியம் ஓய்வெடுக்கும் போதும், இரவில் ஓய்வெடுக்கும் போதும், காலை**

**நேரத்தை அவர்கள் அடையும் போதும், மாலை நேரத்தை அவர்கள் அடையும் போதும் (இப்படி எல்லா நேரங்களின் போதும்) அந்த நெருப்பு அவர்களுடனேயே இருக்கும்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

அறிவிப்பாளர் :அபூஹுரைரா (ரலி) நூல் :புகாரீ 6522

எனவே, சிறிய அளவில் அனைக்க இயலாத அளவுக்கு ஏற்படும் நெருப்பை மறுமை நாளின் அடையாளம் எனக்கருதத் தேவை இல்லை. இதே வேளையில் மறுமை நாளின் அடையாளமாக பெரும் தீவிபத்து ஏற்படும். அது அணைக்க இயலாத அளவுக்கு இருக்கும். இந்த நெருப்பின் வேகம் கூடுதலாக இருக்கும் என்பதோடு, அது மக்கள் அனைவரையும் ஒரே இட த்தில் ஒன்று சேர்க்கும். மக்கள் உண்ண, உறங்க விரும்பினால் அதற்காக சிறிது அவகாசம் தரும். அதன்பின் மீண்டும் துரத்தும். எனவே, மறுமை நாளின் அடையாளமாக 'பெரும் நெருப்பு' ஏற்படும் என்பதை கவனத்தில் **கொள்வோமாக!**

## வேண்டுகோள்!

இதுவரை மறுமை நாள் ஏற்பட உள்ளது என்பதை உணர்ந்திட சில அடையாளங்கள் உண்டு என்று நமக்கு நபி (ஸல்) அவர்கள் மூலம் அறிவிக்கப்பட்டுள்ள அடையாளங் களைக் கண்டோம். அவற்றில் பல முடிந்துவிட்டன. நிகழ்ந்துவிட்டன. கண்கூடாக நாமும் கண்டுள்ளோம்.

பெரும் அடையாளங்களாக உள்ள புகை மூட்டம், சூரியன் மேற்கே உதித்தல், அதிசயப் பிராணி, தஜ்ஜால் வருகை, ஈஸா நபி வருகை, யஃஜூஜ் மற்றும் மஃஜூஜ் கூட்டம் வருகை, கிழக்கே ஒரு பூகம்பம், மேற்கே ஒரு பூகம்பம், அரபுப் பகுதியில் ஒரு பூகம்பம், பெரும் நெருப்பு' ஆகிய பத்து அடையாளங்கள் பற்றியும் அறிந்து கொண்

டோம். இவை வெகு விரைவில் நிகழும் என்பதை யும் அறிந்து கொண்டோம்.

மறுமை நாள் வெகுவிரைவில் வர உள்ளது. மறுமை வாழ்வே நிலையானது என்பதால் மறுமை நாளில் நம் வாழ்க்கை சிறப்புற அமைய முயற்சிப்பதே சரியான அணுகு முறையாகும்.

**'உலக வாழ்க்கை வீணும், விளையாட்டுமேயன்றி வேறில்லை. இறையச்சமுடையோருக்கு மறுமை வீடே மிகவும் மேலானதாகும். நீங்கள் இதை சிந்திக்க வேண்டாமா?'**

**(அல்குர்ஆன் 6.32)**

**சொர்க்க வாசிகள் சொர்க்கத்தில் நுழைந்ததும், ஒரு (வானவர்) அனைவரையும் அழைத்து, 'சொர்க்கவாசி களே! நிச்சயமாக நீங்கள் இங்கு எப்போதும் வாழ்வீர்கள். ஒரு போதும் மரணிக்க மாட்டீர்கள். மேலும் நிச்சயமாக நீங்கள் இங்கு எப் போதும் ஆரோக்கியமாக இருப்பீர்கள். ஒரு போதும் நோயாளி யாக ஆக மாட்டீர்கள். மேலும், நீங்கள்இங்கு இளமை யிலே இருப்பீர்கள். ஒரு போதும் முதுமையடைய மாட்டீர்கள். மேலும் நீங்கள் இங்கு சுகத்தை அனுபவிப் பீர்கள். ஒரு போதும் கஷ்டப்பட மாட்டீர்கள்' என்று கூறுவார் என, நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

**அறிவிப்பாளர்கள் :அபூஸயீத் அல்குத்ரீ (ரலி), அபூஹுரைரா(ரலி)**
**நூல் :முஸ்லிம்**

எனவே மறுமையும், அதில் கிடைக்கும் சொர்க்க வாழ்க்கையுமே நிரந்தரமானது என்பதை உணர்ந்து, இந்த உலகில் வாழும் போதே நற்செயல் புரிந்து, நல்லடியார்களில் ஒருவராக நாமும் மறுமைநாளில் சேர்ந்திருக்க முயற்சிப் போமாக!

**அல்லாஹ் போதுமானவன்.**

## பொருளடக்கம்

## புத்தக விவரத் தொகுப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | கியாமத் நாளின் அடையாளங்கள் |
| ஆசிரியர் | : | முஹம்மது மைதீன் உலவி |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | மூன்றாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | மார்ச் 2007 |
| பிரதிகள் | : | 2000 |
| பக்கங்கள் | : | 72 |
| அச்சிட்டோர் | : | A.M. பிரிண்டிங் ஏஜென்ஸி<br>சென்னை–1.<br>போன் – 99411 75303 |
| வெளியீடு | : | மாலிக் பப்ளிகேஷன்ஸ், நல்லூர். |
| கிடைக்குமிடம் | : | ஸாஜிதா புக் செ்ன்டர்<br>248, தம்புச் செட்டி தெரு<br>முதல்மாடி, சென்னை–1<br>போன் – 25224821 |
| விலை | : | ரூ. 14.00 |